# தடையில்லா
# மருத்துவ பாதுகாப்பு
# மற்றும்
# வருடாந்திர வருவாய்...

...உங்களுக்கு மற்றும்

உங்கள் வாழ்க்கை துணைவருக்கு.



# SENIOR CITIZENS'
## UNIT PLAN

முதியோர்களுக்கு யூடிஐயின் காணிக்கை



யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா

இத்திட்டத்தை வழங்குவதில் கட்டிணைப்பு கொண்டுள்ளது....



நியூ இந்தியா அஷ்யூரன்ஸ் கம். லிட்.

இந்தியாவின் மிகப்பெரிய ஜெனரல் இன்ஷ்யூரன்ஸ் நிறுவனம்

எல்லா செக்யூரிட்டி முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்கிற்கு உட்பட்டவைகளாகும். முதலீடு செய்யுமுன் உங்களுடைய முதலீட்டு ஆலோசகர் அல்லது ஏஜெண்ட்டை ஆலோசிக்கவும்.

## சிறப்பு அம்சங்கள்

- **ஒப்பற்ற திட்டம்**

  ஒரு முறை மட்டும் செய்யும் முதலீடு: உங்களுக்கும் உங்களுடைய உற்ற துணைவருக்கும், 58 வயதிலிருந்து பாதுகாப்பு அளிக்கிறது: ரூ. 5 இலட்சம் வரையிலான மருத்துவமனை செலவுகளுக்கு.

- **எப்போது, எவ்வளவு முதலீடு செய்ய வேண்டும்**

| உங்கள் வயது | ரூ. |
|---|---|
| 18 | 2500 |
| 25 | 2800 |
| 30 | 4300 |
| 35 | 6300 |
| 40 | 9800 |
| 45 | 15300 |
| 50 | 24500 |
| 54 | 35000 |

  55-60 வயதினர்கள் இத்திட்டத்தில் மே 31, 1994 வரை மட்டுமே சேர முடியும்.

- **இத்திட்டம் எவ்வாறு வேலை செய்கிறது.**

  உங்கள் சீனியர் சிட்டிஸன்ஸ் அடையாள அட்டையை மருத்துவமனைகளில் காட்டுங்கள்: சிகிச்சைப் பெற்ற பிறகு கையொப்பமிட்டு, வெளியேறுங்கள்.

- **100க்கும் மேலாக தேர்ந்தெடுத்த மருத்துவமனைகளுடன் தொடர்பு கொண்டுள்ளோம்**

  இந்தியாவின் பெருநகரங்களிலுள்ளவை: பம்பாய் ஹாஸ்பிடல் (பம்பாய்), அப்பல்லோ ஹாஸ்பிடல் (சென்னை, ஹைதராபாத்), CMRI (கல்கத்தா), எஸ்கார்ட்ஸ் ஹார்ட் ஹாஸ்பிடல் (டில்லி) மேலும் பற்பல.

- **வருடாந்திர வருவாய்**

  55 வயதுக்கு முன் சேர்பவர்களுக்கு 58 வயதிலிருந்து வருடாந்திர வருவாய் கிட்டும்.

- **"க்ளைம்" இல்லையேல் போனஸ்**

  'க்ளைம்' செய்யாத ஒவ்வொரு ஆண்டுக்கும் 5% (அதிகபட்சம் 10 ஆண்டுகளுக்கு).

- **தீர்வு பெறாத தொகையை எடுத்துக் கொள்ளும் வசதி**

  61-ஆம் வயதில் கிடைக்கும், மருத்துவ நற்பயன்களை இழக்காமல்.

- **முன்பிலிருந்தே விளங்கும் நோய்களுக்கும் இப்பாதுகாப்பு உண்டு.**

UTI.1.94 TM B

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101

கிளை அலுவலகங்கள்: • கோயம்புத்தூர். போன்: 210399 • சென்னை. போன்: 517101, 517190 • மதுரை. போன்: 38186 • திருச்சி. போன்: 32619

# மலை மறைந்தது!



தமிழ் பத்திரிகை உலகு, தனக்குப் பக்க பலமாக மலை போல் நின்ற ஒரு நபரை இழந்து தவிக்கிறது. எஸ்.ஏ.பி. அண்ணாமலை மறைந்து விட்டார். லட்சோப லட்சம் குமுதம் வாசகர்கள் ஈரமாகிய கண்ணங்களைத் துடைத்துக் கொள்கின்றனர்.

அழகப்பச் செட்டியாரைக் கௌரவ ஆசிரியராகக் கொண்டு இரண்டு கல்லூரித் தோழர்கள் - எஸ்.ஏ.பி.; பார்த்தசாரதி - துணிந்து குமுதம் பத்திரிகையை ஆரம்பித்தபோது அவர்கள் பட்ட கஷ்டங்கள் கொஞ்ச நஞ்சமல்ல. ஆனால் வெகு சீக்கிரமே குமுதம் மலர்ந்து மணம் பரப்பி, தமிழர் மனங்களில் ஒரு நிரந்தர இடம் பிடித்துக் கொண்டது. மணத்தை உருவாக்கியவர் எஸ்.ஏ.பி.; அதை நாடு நகரமெல்லாம் பரப்பியவர் பார்த்தசாரதி. அயராத உழைப்பு.

ஆசிரியர் ''கல்கி'', பத்து குமுதம் இதழ் களைச் சேர்ந்த மாதிரி எடுத்து வைத்துக்கொண்டு பக்கம் விடாமல் படித்து விட்டு, தமது உதவி ஆசிரியர்களை அழைத்து, ''நாம் இன்னும் சிறப்பாக இயங்கவில்லை யானால் இந்தப் பத்திரிகை வெகு சீக்கிரம் நம்மை முந்திக் கொள்ளும்'' என்று சொன்ன அந்த நாளை நினைவு கூர்கிறேன்.

கல்லூரி பாடப் புத்தகத்துக்கு இடையில் குமுதம் இதழை வைத்துக்கொண்டு விரிவுரையாளருக்குத் தெரியாமல் எஸ்.ஏ.பி.யின், ''காதலெனும் தீவினிலே'' படித்த தினங்கள் ஞாபகம் வருகின்றன. அதன் பின் எத்தனையோ சிருஷ்டிகள்.

• பின்னால், குமுதம் லட்சக் கணக்கில் விற்பனையாக வேண்டும்; அதன் மூலம் விலையைக் கூட்டாமலிருக்கலாம்; விளம்பர விகிதங்களை அதிகரிக்கலாம் என்ற நோக்கில் செயல்பட்டு ஒரு ஃபார்முலா வகுத்தார் எஸ்.ஏ.பி. ''குமுதம் ஃபார்முலா'' பற்றி வாதப்பிரதிவாதங்கள் இருக்கக்கூடும். ஆனால் அது வெற்றி பெற்று விட்டது. ஒரு காலகட்டத்தில் ஆறு லட்சம் பிரதிகளுக்கு மேல் விற்பனையாகி, இந்தியாவிலேயே மிக அதிகமாகச் செலாவணியாகும் பத்திரிகை என்று சாதனை படைத்தது.

இவ்வாறு திட்டமிட்டுச் செயலாற்றிய எஸ்.ஏ.பி.யின் வெற்றிக்கு ஒரு முக்கிய காரணம், அவர் தமக்குக் கீழ் பணியாற்ற, தகுதியான நபர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களுக்கு முழுச் சுதந்திரம் தந்ததாகும். நிர்வாகப் பொறுப்பைப் பார்த்தசாரதி ஏற்றார் எனில் இதழ்களின் தயாரிப்பை மாறி

மாறி ஜ.ரா.சு., ரா.கி.ர, புனிதன் போன்றோ ரிடம் விட்டார். ஊக்குவிப் பார்; தலையிடுவது போல் தோன்றாத வகையில் திருத்தி அமைப்பார்.

சாண்டில்யனைப் பிடித்துப் போட்டது எஸ்.ஏ.பி யின் ராஜதந்திரங்களில் ஒன்று. ஹேமா ஆனந்ததீர்த்தன், பால்யூ போன்ற பல எழுத்தாளர்கள் ''குமுதம் எழுத்தாளர்கள்'' என்றே போற்றப்பட்டனர்.

பத்திரிகை உலகில் மாபெரும் வெற்றி கண்ட எஸ்.ஏ.பி., அடக்கமே உருவானவர். அவர் அதிர்ந்துபேசி யாரும் அறிந்ததில்லை. உறுதியாக இருக்கவேண்டிய தருணங்களில் அப்படி இல்லாமல் இருந்ததும் இல்லை. தகுதி அறிந்து தரும் அவரது கொடை உள்ளத்தை வலக்கரம் தவிர சில அணுக்கத் தோழர்கள் மட்டுமே அறிவர்.

மிகச் சிறந்த சொற்பொழிவாளராயினும் மேடை ஏறுவதில்லை என்பதை ஒரு கொள்கையாகக் கொண்டிருந்தார். விதிவிலக்காகச் சில உண்டு. ''கல்கி'' அமரர் ஆனபோது இரங்கல் கூட்டத்தில் ''பொன்னியின் செல்வன்'' என்று ஆரம்பித்து, அவரது நூல்களின் தலைப்புக்களாலேயே அவரை மேன்மேலும் வர்ணித்து, இறுதியில், ''அமரதாராவாக என்றும் விளங்குவார்'' என்று முடித்த போது எழுந்த கரவொலி இன்றும் என் காதுகளில் ஒலிக்கிறது. அவர் உளமாறப் பேசி மகிழ்வித்த மற்றொரு நிகழ்ச்சி, கல்கி பத்திரிகையின் வெள்ளி விழா.

பக்திமான். வெள்ளிதோறும் திருக்குறள் பாராயணம், பூஜை, பஜனை எல்லாம் உண்டு. யோகாசனம் பழகி இறுதி வரை உடலையும் உள்ளத்தையும் ஆரோக்கியமாக வைத்திருந்தார்.

குமுதம் அவரது உயிர்மூச்சு. உயிர் மூச்சு உள்ளவரை அவரைப் பிரிந்து விட்டதாக எப்படி நாம் எண்ண முடியும்? அவரை அதில் தொடர்ந்து காண்போம். ஆறுதல் பெறுவோம்.

– கி. ராஜேந்திரன்

# ஐஸ் சாம்ராஜ்யத்தில் கொஞ்ச நேரம்...

வனிலா, கஸாட்டா, இடாலியன் டிலைட், சாக்கோ பஞ்ச், குல்ஃபி, கோக்கோ, சாக்கோ, மேங்கோ-டு-இன்-ஒன், அமான்ட் கஸ்ட்..

தாங்கள் தயாரிக்கிற 52 வகைகளில் இவை எல்லாம் பரபரப்பாக விற்பனை ஆகிற ஜாதி என்று சொன்னவர்- அருண் ஐஸ்க்ரீம் அதிபர் சந்திர மோகன்.

சேலம்-ஆத்தூர் சாலையில், ஒரு படு சுத்தமான ஐஸ்க்ரீம் தொழிற்சாலையில் சுமார்

* அதிகாரிகள் ஞானசுந்தரமும் தன்ராஜனும் - புதிய ஜில் சந்தோசம்



இரண்டு மணி நேரம் சுற்றிப் பார்த்தால், அடுத்த பிறவியில் இப்படி ஒரு ஃபாக்டரியில் உத்தியோகம் கிடைக்க நீங்கள் கடவுளிடம் வேண்டுகோள் விடுப்பது நிச்சயம்.

பால் அதிகமாகக் கிடைக்கிற இடம் சேலம். அதாவது மில்க்-பெல்ட். பல சுற்று வட்டார கிராமங்களின் பெயர்கள், பளபளவென்ற அலுமினிய 'கேன்'களில் பச்சை பச்சையாய் எழுதியிருக்க, பால் எந்த கிராமத்திலிருந்து வந்தது என்று தெரிகிறது.

பால் வந்ததும் ஒருவர், எத்தனை கொழுப்பு என்று (பாலில் தான்; விற்பவரிடம் அல்ல.) டெஸ்ட் பண்ணிக் குறித்துக் கொள்ளுகிறார். இப்படி வரும் பால், ஒரு பெரிய்ய, பிரம்மாண்டமான எவர்சில்வர் வட்ட டாங்க்கில் கொட்டப்பட்டு, கொதிக்க வைக்கப்படுகிறது. இந்த அதிக பட்சக் கொதிநிலையில், பாக்டீரியாக்கள் பரலோகப் பிராப்தி அடைகின்றனவாம். பிறகு ஐஸ்க்ரீம் மிக்ஸைப் போட்டு அடி அடியென்று மெஷினில் அடித்து, பிறகு ஹோமோஜினைஸருக்கு அனுப்புகிறார்கள். இது ஒவ்வொரு துளியிலும், துளியின் ஒவ்வோர்

* கஸாட்டா - கஸாட்டா!





* கிராமங்களிலிருந்து வந்து இறங்கும் பால்...

அணுவிலும் ஒரே சீரான கலவை கிடைப்பதற்கு. சில துடுக்கு பாக்டீரியாக்கள், சூட்டில் பிராணன் போகாமல் தப்பித்து விடக் கூடும். அதற்காக, ஜிலீ ரென்று ஒரேயடி யாகக் குளிர வைக் கிறார்கள். அப்புறம் பாக்டீரியாவாவது, ஒன்றாவது, மூச்!

மெச்சூரிடி பகுதியில் பன்னிரண்டு மணி நேர வாசம். பிறகு ஃப்ரீஸரில் கொஞ்சம் 'தெம்பு' ஊட்டுகிறார்கள். இந்த மில்க் மிக்ஸ் படிப்படியாகக் கெட்டியாக்கப்படுகிறது.

ஒரு பக்கம், அரை ஃபுட்பால் சைஸுக்கு ஐஸ் க்ரீம் தயாரித்துக் கொண்டிருந்தார்கள். என்ன கலாட்டா என்று பார்த்தால் கலாட்டாவாம்! காபி, ஸ்ட்ராபெரி, வனிலா, பிளாக் கரன்ட் என்று ஒவ்வொரு லேயருக்கும் ஒவ்வொரு கலவையூட்டி, மேலே பூச்சுக்கு வனிலா கோட்டிங் கொடுத்த பின், பதமாக வறுத்த முந்திரிப் பருப்பைப் பதிக்கிறார்கள். பார்க்கிற போதே கையும் வாயும் பரபரக்கிறது.

சர்க்கரை, மூட்டைக் கணக்கில்.

* குழாயில் கொட்டும் ஐஸ்க்ரீம்...

ஒரு பக்கம், பாதாமாகக் குவித்திருக் கிறார்கள். இன்னொருபுறம் உலர்ந்த திராட்சை. பெரிய பெரிய தட்டுக்களில் அரைச் சந்திர வடிவ முந்திரிப் பருப்புக் குவியல். தில்லியிலிருந்து வரும் உலர்ந்த பழ வகைகள். பிளாஸ் டிக் கப் தவிர, டென்னிஸ் பந்து அமைப்பில்



பிளாஸ்டிக் பந்துகள், வாக்வம் இவிலிங் முறையில் சுத்தமாக்கப்படுகின்றன.

"யாரங்கே, இவர்களுக்கு ஐஸ்க்ரீம் கொண்டு வந்து கொடுங் கள்!" என்று உத்தரவிட்டார் சந்திர மோகன்.

இரண்டு நாளாகப் பயங்கர ஜலதோஷம். தொண்டை ஒத்துழை யாமை இயக்கம் செய்கிறது. மூக்கோ கொண, கொண. ஐஸ் க்ரீமா! அப்புறம் கடவுளே, எத்தனை எத்தனை கோல்டரின் மாத்திரைகள் விழுங்க வேண்டும்?

ஓர் அரைச் சாப்பாடு அளவுக்கு வந்த நான்கு வகை ஐஸ்க்ரீம்களை விழுங்கியதுதான் தெரியும். ஜலதோஷம் போன இடம் தெரியவில்லை! (அடுத்த முறை ஜலதோஷம் பிடித் தால் ஐஸ்க்ரீம்தான் சாப்பிடு வது....ஹச்!)

சுத்தம் சோறு போடும் என்பார்கள். இங்கே சுத்தம் ஐஸ்க்ரீமே போடுகிறது. ஊழியர்கள் உள்ளே நுழையுமுன், பொட்டாசியம் பெர்மாங்கனேட் நீரில் கையைக் காலைக் கழுவி, அவரவர் செருப்பை அணிந்து கொண்டுதான் செல்ல வேண்டும். கையுறையும், சில பகுதிகளில் வாய் மூடியும் கட்டாயம். எல்லார் தலையிலும் குல்லாவும் உண்டு! ஹைஜீன் ரொம்ப ரொம்ப ஹை. அசுத்தம் நஹி.
பாக்டரியில் உபயோகித்த தண்ணீரை வெளியேற்றும்போது, சுத்தம் செய்து, தங்கள் பண்ணைக்கே பயன்படுத்துகிறார்கள்!

கொஞ்சம் தள்ளி, சுமார் மூன்று கி.மீ. தூரத்தில் இன்னொரு நவீன பாக்டரி. இங்கேயும் பால் வந்து இறங்குகிறது. .

க்ரீம் செபரேடர் என்ற கருவி கொண்டு பாலிலிருக்கும் கொழுப்பை அகற்றி ஐஸ்க்ரீமுக்குக் கொடுத்து விட்டு, மிஞ்சும் 'ஸ்கிம்ட் மில்க்'கை பாஸ்ட்யு ரைஸ் செய்கிறார்கள். இந்தப் பால், பவுடராக மாற்றப்பட்டு சேமிக்கப் படுகிறது. "ஒரு நாளைக்கு ஒரு டன் இந்தத் தொழிற்சாலையின் திறன்" என்கிறார் அதிகாரி ராமா னுஜம்.

இந்தப் புது வருஷத்தில் பால் பவுடருக்குச் சுவையூட்டி 'சந்தோசா' என்ற பெயர் அறிமுகப் படுத்தியுள்ளார்கள். ஸ்ட்ராபெரி, பிஸ்தா, மேங்கோ சுவைகளில், இந்தக் கோடையில் குளிரக் குளிர வந்திருக்கும் ஜில் ஸ்பெஷல்.

"சாக்லேட் சுவையிலும் கொண்டு வரப் போகிறோம்!" என்கிறார் உயர் அதிகாரி தனராஜன். "கர்நாடக-கேரள மாநிலங்களுக்கு விற்பனைக்கு அனுப்ப, சேலம் மையமான இடம்" என்கிறார் சந்திரமோகன்.
"பால் என்றாலே குடிக்க அடம் பிடிக்கும் குழந்தைகளை, டம்ளர், டம்ளராகக் குடிக்க வைக்கும் பானம் இது. இந்தியாவிலேயே முதன் முறையாக அறிமுகப் படுத்தப்பட்டது!" என்கிறார் தனராஜன்.
இந்தப் பவுடரை மிக்ஸியில் குளிர்ந்த நீரோடு கலந்து, ஐஸ் கட்டிகள் இரண்டு போட்டு, விர்ரென்று ஓர் அடி அடித்து, நுரை ததும்பக் குடித்தால்- சொர்க்கம்தான், போங்கள்!

- சாருகேசி
புகைப்படங்கள்: பாலாஜி



"கட்சிக்காகத் திரட்டின நிதியெல்லாம் திடீர்னு காணாம போயிடுச்சுன்னு எங்க தலைவர் அறிக்கை விட்டு இருக்கார்!"

"அது பரவாயில்லையே! கட்சிக்காகத் திரட்டின நிதியோட எங்க தலைவரே காணாமப் போயிட்டாரே!"

- என். கே. பாலசுப்பிரமணியன்

# எண்ணெய்க் குளியல் ஜில் தானா? நீராகாரம் ஜோர் தானா?



★ சந்தோஷ்குமார்



★ குணசேகரன்



★ ரவி செல்வன்

"எண்ணெய் தேய்த்துக் குளித்தால் உடம்புக்குக் குளிர்ச்சி" என்கிறார்கள். 'எனில், ஏ.ஸி. ரூமில் உட்கார்ந்தால் உடம்புக் குளிர்ச்சி இல்லையா?' என்றால் இல்லை. அதென்ன உடல் குளிர்ச்சி, சூடு? நிஜமாகவே, மருத்துவ ரீதியில் இதற்கு ஆதாரம் உண்டா? அல்லது வெறும் உடான்ஸா? சில வேறு துறை மருத்துவர்களைக் கேட்டோம்:

**டாக்டர் சந்தோஷ் குமார் (அலோபதி):**

உடல் உஷ்ணம், குளிர்ச்சி என்பதே பிரமைதான். வெயில் நாட்களில் உடல் உஷ்ணம் கூடுவது, குளிர் நாட்களில் குறைவது என்பது அலோபதியில் ஒத்துக்கொள்ள முடியாத விஷயம். வெயிலில், திறந்த வெளியில் கடின உழைப்பு செய்பவர்களுக்குக் கூட தெர்மாமீட்டர் வைத்துப் பார்த்தால் நார்மலாகத்தான் இருக்கும். ஆங்கில மருத்துவ முறையில், உடலின் நீர் வெளியேறி, சர்க்கரைச் சத்து குறையும் நிலையை Hyperthermia என்பார்கள். 'சன் ஸ்ட்ரோக்' போன்ற தீவிர தாக்குதல் அல்லது வேறு நோய்களால் இது விளைய, உடல் சூடேறலாம். நோய் குணமடைய, உஷ்ணம் குறையும்.

எண்ணெய்க் குளியல், பழையது சாப்பிடுவது போன்றவற்றுக்கு அலோபதி முறையில் இடமில்லை. சாதத்தைத் தண்ணீரில் ஊறவைத்து, அடுத்தநாள் சாப்பிடுவதால், பூஞ்சைக் காளான் உண்டாகி விடுகிறது. கிருமிகள் பழைய சாதத்தில் கலந்து வயிற்றுக்குள் போவதால் உபாதை ஏற்படுகிறது. எண்ணெயை முன்பெல்லாம் செக்கில் ஆட்டி, எடுத்து சுத்தமாக வைத்திருந்தார்கள் என்று சொல்லலாம். இப்போது எல்லாவற்றிலுமே கலப்படம், போலி. அதனால் அலர்ஜி ஏற்படுகிறது.






– கார்த்திக் ராஜா

எனவே எண்ணெய்க் குளியலும் அநாவசியம்.

**டாக்டர் குணசேகரன்**
**(சித்த மருத்துவர்):**

உடல் உஷ்ணம் அதிகம் என்று கூறப்படும் நாட்களில் அதிகப்படியாக 99°F வரைதான் தர்மா மீட்டரில் காட்டும். ஆனால் கைக்கு, உடலின் சூடு தெரியும். உஷ்ணம் அதிகமாகி இருந்தால், தூக்கமின்மை, வயிறு உப்புசம், கண் எரிச்சல், மலத் துவாரத்தில் எரிச்சல் போன்றவை இருக்கும். அதே போல், உடல் குளிர்ந்து விட்டாலும் கை வைத்துப் பார்த்தால், உடலில் சில்லிப்பு தெரியுமேயொழிய தர்மா மீட்டரில் 98.4° F தான் காட்டும். இதையும் சில அறிகுறிகள் மூலம் அறிந்து கொள்ளலாம். அதாவது சளி பிடித்தல் மற்றும் கபம் ஏற்படுதல்.

அலோபதி முறையில், ஆயின்ட்மென்ட்களை, தோலின் மீது தடவி உடலில் உள்ள வலியையோ, காயத்தையோ போக்கலாம் என்று கூறும்பொழுது எண்ணெய் தேய்ப்பது மட்டும் உரிய பயனைத் தராதா என்ன? எண்சாண் உடம்பிற்கு சிரசே பிரதானம் என்று உச்சந்தலைமேல் எண்ணெய் வைத்து, தேய்த்து சூட்டைக் குறைக்கிறோம். எள், உஷ்ணமான பொருள்தான். எள்ளிலிருந்து கிடைக்கும் நல்லெண்ணெய்க்கும் அந்தக் குணம் உண்டு. உடல் சூட்டோடு எள் சூடும் கலப்பதால் தேகம் குளிர்ந்து விடுகிறது. (Two Negatives Make one positive, simple!) முடியில் கந்தகம் இருப்பதால் இழுப்பு சக்தி அதிகம். எண்ணெயை சீக்கிரம் உள்வாங்கி, குளுமையாக்கி விடும்.

**டாக்டர் ரவி செல்வன்**
**(ஆயுர்வேத மருத்துவர்):**

உஷ்ணம், குளிர்ச்சி என்பவை அவ்வப்போது நம் உடம்பில் ஏற்படுபவை தான். திடீர் நரை, சிறுநீரில், நகத்தில் மஞ்சள் நிறம் தெரிவது போன்றவை இவற்றின் அறிகுறிகள். இதைத்தான் பித்தம் என்றும் சொல்வார்கள். இரத்த சோகை ஏற்படவும் வாய்ப்புண்டு. சூடு அதிகமானால், உஷ்ணம் என்றும், அதுவே மிகவும் அதிகப்படியாகிவிட்டால் குளுமை என்றும் பொருள். அதிகச் சூட்டில் திடப் பொருள் உருகி திரவமாகிறதல்லவா? அதேபோல் உடல் சூடு அதிகமானாலும் திரவம் வெளிப்படும்.

சாதத்தில் நீர் ஊற்றினால் புளிப்பு ஏறி, ஆல்கஹாலின் குணம் உண்டாகி, அந்த சாதம், சாப்பிடுபவரைத் தூங்க வைக்கிறது. வெயில் காலத்தில் எண்ணெய் தேய்ப்பதின் மூலம் மயிர்க்கால்கள் அகன்டு துவாரம் பெரிதாகி, உடலுக்குள் இருக்கும் வெப்பத்தை வெளியேற்றுகிறது. மேலும் சீயக்காய்க்கு அதிகப்படியான குளுமைக் குணம் உண்டு. எண்ணெய் தேய்த்து வெப்பத்தை வெளியேற்றியவுடன், சீயக்காய் தேய்த்துக் குளிப்பதால், உடல் குளுமையாகி விடுகிறது.

பேட்டி: மாலதி சந்திரசேகரன்
படங்கள்: கோபிநாத்

---



"உங்களைப் பற்றி நல்லாத் தெரிந்தவர் யாரோ போனில் கூப்பிடறாங்க."

"எதை வச்சு சார் அப்படிச் சொல்றீங்க?"

"குப்புசாமியைக் கொஞ்சம் எழுப்பி போனுக்கு வரச் சொல்ல முடியுமா சார்னு கேட்கறாரே!"

– சீர்காழி வி. ரேவதி

# தொழிலுக்கு உதவுங்கள்; செல்வம் பெருக்குங்கள்!

வாசகர்களின் பொருளாதார நிலை மேன்மையுற உதவும் வகையில், ''கல்கி'' பங்கு மார்கெட்டுக்கு வருகின்ற முதல் தரமான சில நிறுவனங்களை அவ்வப்போது அறிமுகம் செய்கிறது. இந்த இதழிலும் வாசகர்களுக்கான இந்த சிறப்புச் சேவை தொடர்கிறது:

## STANDARD CHROME, CALCUTTA

தொழில் துறை வட்டாரங்களில் வி.எஸ். ஜலான் என்ற பெயர் பிரசித்தமானது. இவரது தலைமையில் இயங்கும் ஜலான் குரூப் தொழிலகங்கள் சணல், ஜவுளி, ரசாயனப் பொருட்கள் முதலியவற்றின் உற்பத்தியில் ஈடுபட்டுள்ளன. இப்போது ஜலான் குரூப்பில் இந்தப் புதிய நிறுவனம் தோற்றுவிக்கப்படுகிறது. இது, இரும்பு-குரோமியம் இணைந்த கலப்பு உலோகத் தயாரிப்பில் ஈடுபடும். ஆண்டு ஒன்றுக்கு 25,000 டன் அளவில் தயாராகும் இந்த ''ஹை கார்பன் ஃபெர்ரோ குரோம்'' உயர்தரமான ஸ்டெய்ன்லெஸ் ஸ்டீல் தயாரிப்பிலும் இதர பல கலப்பு எஃகு தயாரிப்பிலும் பயன்படும் பிரதான அம்சமாகும்.

மத்தியப்பிரதேசம், ராய்கரில் இத்தொழிலகம் உருவாகிறது. கச்சாப் பொருட்களை TISCO நிறுவனம் சப்ளை செய்வதுடன் பிரபலமான இந்த டாடா நிறுவனமே மூன்று ஆண்டுகளுக்கு புதிய நிறுவனத்தின் தயாரிப்பை மொத்தமாக வாங்கிக் கொள்ளும். மூலதனத்திலும் TISCO வுக்குப் பங்கு உண்டு. மொத்தம் ரூ.15 கோடி செலவில் உருவாகப்போகும் தொழிலகத்துக்கு, நிதி நிறுவனங்கள் தரும் கடன், ஜலான் குரூப், டிஸ்கோ ஆகியவற்றின் மூலதனம் ஆகியவை போக, பொதுமக்களுக்கு 19,50,000 பங்குகள் பத்து ரூபாய் விலைக்கே வழங்கப் படுகின்றன. டாட்டா, ஜலான் என்ற இரு பெரும் தலைகள் இணையும் போது வெற்றி உறுதி என்றே நம்பலாம். இந்த நிறுவனப் பங்குகளின் மதிப்பு நாளாவட்டத்தில் நிச்சயமாக உயரும். விண்ணப்பங்கள் 29 உ முதல் பெறப்படும்.

## NATIONAL ENGINEERING CO., MADRAS.

ஏற்கெனவே லாபகரமாக நடந்து வரும் இந்த நிறுவனம் துளசியன் குரூப் நிறுவனங்களில் ஒன்று. எஃகுப் பொருள்களை ஏராளமாக உற்பத்தி செய்து வருகிறது. தற்போது தொழிலகத்தை நவீனமாக்கவும் விரிவாக்கம் செய்யவும் விழைகிறது. இதற்குத் தேவைப்படும் 426 லட்சம் ரூபாயில் கடன் பெறும் தொகை போக ரூ. 345 லட்சத்துக்குப் பங்குகளை விநியோகிக்கிறது. இன்றைய நிர்வாகிகளே இதில் 105 லட்சம் ரூபாய் முதலீடு செய்கிறார்கள். பாக்கி 240 லட்சம் ரூபாய்க்கு 12 லட்சம் பங்குகள் பொதுமக்களுக்கு வழங்கப் படுகின்றன. அதாவது ஒவ்வொரு பங்கையும் ரூ.10 கூடுதல் விலை தந்து ரூ. 20க்குப் பெற வேண்டும். இந்த நிறுவனத்தின் தயாரிப்புகளுக்கு நல்ல கிராக்கியுள்ளது. தொடர்ந்து லாபகரமாக நடப்பது உறுதி. பயனுள்ள முதலீடாகவே விளங்கும்.

## LIBERTY GRANITES LTD., HYDERABAD

1990 இல் நிறுவப்பட்டது இந்தத் தொழிலகம். நூறு சதம் உற்பத்தியும் ஏற்றுமதியாகிறது. ஆண்டொன்றுக்கு 50,000 சதுர மீட்டர் கிரானைட் பாளங்கள் உருவாக்கும் ஆற்றல் படைத்த நிறுவனம். கிரானைட் பாளங்களுக்கும் சதுரத் துண்டங்களுக்கும் அயல் நாடுகளில் ரொம்ப கிராக்கி இருப்பதால், விரிவாக்கம் செய்து, கூடுதல் வசதிகளைப் பெற இந்த நிறுவனம் முடிவு செய்துள்ளது. இதற்கு ரூ.12.72 கோடி தேவைப்படுகிறது. கடன் பெறும் தொகை, இன்றைய நிர்வாகத்தின் முதலீடு முதலியவை போக, பொது மக்களுக்கு 85,20,000 பங்குகள் ரூ.10/- விலைக்கே வழங்கப்படுகின்றன. இந்த நிறுவனம் ஏற்கெனவே யூ.ஏ.ஈ; சிங்கப்பூர்; யூ. எஸ்.ஏ. போன்ற நாடுகளுடன் வர்த்தக ஒப்பந்தங்கள் செய்து கொண்டிருக்கிறது. ஏற்றுமதிக்கான வாய்ப்புகள் எக்கச்சக்கம். எதிர்கால லாபநோக்கு திருப்திகரமாக உள்ளது. இதில் முதலீடு செய்து பெறப்படும் பங்குகளின் மதிப்பு உயர்வது உறுதி.

- வி.கோபாலன்

# Kalki Shopping Page

Jaipur-Bangle sets from Rs. 100/- Hyderabad Pearls from Rs. 15/- per gm. Emeralds, Ruby's, Gomethakam, Jade, Aquamarine, Sapphire, Corals, Amethyst, Topaz, Cat's eye and many more precious and semi precious stones in all varieties.

**Hundreds of Birth Stones were given according to their Horoscope successfully. Visit once/ See the difference.**

*Step at :*

**JAIPUR GEMS 'N' JEWEL**

Near Panagal Park,
(Opp. to A. R. R. Complex)
North Usman Road, T. Nagar,
Madras - 17. Tamil Nadu.
South India.

**4 ஆம் ஆண்டு விழா சிறப்பு தள்ளுபடி விற்பனை**

சுங்கிடி புடவைகளின் சுந்தரகூடம்

**காஞ்சிபுரம் சொசைட்டி ஹவுஸ்,**

1, வடக்கு மாட வீதி,
மைலாப்பூர், சென்னை – 600 004.
மாபெரும் தள்ளுபடி விற்பனை

**பர்வதா சாரீஸ்**

ஜரிகை சுங்கிடி புடவைகள்

6 முதல் 9 கெஜம் வரை
1.5.94 முதல் 10.5.94 வரை
மட்டுமே

**சிறப்பு பரிசுகள் வழங்கப்படுகிறது.**

**IN CONSUMER SERVICE SINCE 1947**

**KRISHNA ALSO AT GODOWN STREET**

Raymond's




DIGJAM




Garden

**Sree Krishna** CUT PIECE COLLECTION PVT. LTD.

Stockists For : SUITINGS, SHIRTINGS & SAREES

39, GODOWN STREET,
(OPP. FLOWER BAZAAR POLICE STATION)
MADRAS - 600 001.
TEL : OFF : 589596

AVAILABLE IN WHOLESALE AND RETAIL

# Kalki Shopping Page

## B. M. SILK SAREES

B. M. சில்க் சாரீஸ்
காஞ்சிபுரம்
பட்டுசேலை
தயாரிப்பாளர் :

5, வடக்கு மாட வீதி,
மைலாப்பூர்,
சென்னை - 600 004.
Phone : 4940291

எங்களின் மாதாந்திர சீட்டு
திட்டத்தில் சேர்ந்து
பயனடையுங்கள்.

குறிப்பு : அனைத்து
பட்டு சேலைகளும்
தறி விலைக்கே கிடைக்கும்.

All Credit Cards Accepted

## NITA GARMENTS

Offers you a wide range of
Salwar-sets for Summer wear,
ranging from Rs. 140 onwards.

*SPECIAL SUMMER OFFER BUY 3 TAKE 1 FREE*
*OFFER VALID TILL MAY 15th ONLY ON SALWAR-SETS AND SAREES.*

ALSO JOIN N OUR
"CHIT-SCHEME" & AVAIL BONUS

AGENTS FOR SHRI SILKS,
MYLAPORE FOR SILK SAREES,
AND DHOTIES...

DISCOUNT FOR BULK ORDERS
FOR WEDDINGS ETC.,

No. 20, II Street, Parameshwari Nagar,
Adyar, Madras - 600 020.

## NETLON

*FOR INSTALLATION OF NETLON INSECTS, MOSQUITOS SCREENS*

CONTACT

**RBS & CO.**

(Authorised Netlon Fabricators)
H.O. No. 3, 42nd Street,
Nanganallur, Madras - 61.
Show Room :
8/2, 3rd Main Road,
Nanganallur, Madras - 61.
Phone : 2346961
Branch : 51-D, Hastinapuram
Main Road, Opp. MIT Institute,
Chrompet, Madras - 44.

## செண்பகம்

பிராண்ட்



**சுத்தமான நெய்**

தனலஷ்மி & கோ.,
36, M.G. புதூர் முதல் வீதி
திருப்பூர் - 638 604
போன் : Off : 21557
Res : 22367
100 Grams, 200 Grams
பவுச் பாக்கெட்டுகளிலும்
கிடைக்கும்

BUMA

# Kalki Shopping Page


திராவிட இயக்க அரசியல்!
அ.தி.மு.க.


வை.கோ.அணி
தி.மு.க.


நான் நினைச்சிருந்தா இந்தக் குண்டை நானே அறிவாலயத்துல வச்சிட்டுப் பழியை வை.கோ. மேல போட்டிருக்கலாம், அல்லது...


வை.கோ.கிட்டயே கொடுத்து அறிவாலயத்துல வைக்கச் சொல்லி-யிருக்கலாம்! ரெண்டுமே பண்ணலையே ஏன்?...


ஏன்னா... வை.கோ.வுக்கு நான் ரகசியமா ஆதரவு கொடுக்கிறது அம்பலமாயிடக் கூடாது, பாருங்க! ஹி... ஹி...


உண்ணாவிரதமாம், உண்ணாவிரதம்! எல்லாம் வெறும் ஸ்டண்டு, நம்பாதீங்க. நான் இருக்காத உண்ணாவிரதமா!...
பீட்டர் அல்போன்ஸை அனுமதி!



# கல்கி

1994
மே 1
மலர் : 52
இதழ்: 40
பவ
சித்திரை 18

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. - பாரதியார்.

## ஜெயலலிதாவுக்கு ஸ்பெஷல் பாராட்டு!

திடீரென்று முதல்வர் ஜெயலலிதா ரொம்பக் கெட்டிக்காரத்தனமாகப் பேசியிருக்கிறார்! அதிலும் மத்திய நிதி அமைச்சர் மன்மோகன் சிங்கை முந்திக் கொண்டு அற்புதமான ஒரு கருத்தை வலியுறுத்தியிருக்கிறார். சென்னையில் 'ஜெ' பேசியது தெரிந்தோ, தெரியாமலோ, புதுதில்லியில் மன்மோகன் சிங் ஆறு நாட்கள் கழித்து அதே கருத்தை எதிரொலித்திருக்கிறார்! இருவரையுமே வாழ்த்துகிறோம். முந்திக் கொண்ட 'ஜெ'க்கு ஒரு ஸ்பெஷல் பாராட்டு.

அப்படியென்ன பிரமாதமாக இருவரும் பேசியிருக்கிறார்கள்? "புதிய பொருளாதாரக் கொள்கை மூலம் தொழில் வர்த்தகத் துறை சுதந்திரமாக இயங்க அனுமதிக்கப்பட்டிருக்கிறது. இதைப் பயன்படுத்திக் கொண்டு தொழிலதிபர்கள் வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதைத் தங்கள் முதல் கடமையாகக் கொள்ள வேண்டும்."

இந்தப் பேச்சுக்குள் ஆழமான கருத்துக்கள் உள்ளடங்கியிருக்கின்றன. இந்நாள் வரை தொழில்துறை வளர்ச்சி அடையாமல் இருந்ததற்கு தொழிலதிபர்கள் அரசின் பர்மிட் லைசென்ஸ்-கோட்டா கொள்கை மீது பழி சுமத்தி வந்தனர். இனி அந்த மாதிரி சால்ஜாப்பு ஏதும் கூற முடியாது. பர்மிட்-லைசென்ஸ் -கோட்டா ஆட்சியில் சில தொழிலதிபர்கள் மட்டுமே அவற்றைப் பெற்று ஏகபோகமாகச் செல்வம் குவித்த காலம் மலையேறி விட்டது. இனி போட்டா போட்டியில் திறமை மிக்கவர்கள் முன்னுக்கு வருவார்கள்; பிறர் பின்னுக்குத் தள்ளப்படுவார்கள்.

ஆனால் இதிலே ஓர் ஆபத்தும் உள்ளடங்கியிருக்கிறது. சுதந்திரப் பொருளாதாரத்தின் அடிப்படையில் தொழில் துறை விரிவடையும் போது, லாப நோக்கம் பிரதானமாக இருக்கும். இது இயல்பு. இதைத் தவறு என்று கூற முடியாவிட்டாலும் இந்த லாப நோக்கு, தானியங்கு முறையில் பொருள்களைத் தயாரித்து விடவே தூண்டும். பொருள்களைத் தயாரிக்க இன்று ரோபோக்கள் வந்து விட்டன. பில்போட, கணக்கு வைத்துக் கொள்ள எல்லாம் கம்ப்யூட்டர்கள் இருக்கின்றன. மாபெரும் எஃகு ஆலையை கம்ப்யூட்டர் அறையில் இருந்தபடி மூன்று, நாலுபேர் நிர்வகித்து விடுகின்றனர். 'எதற்கு ஆட்களை அதிகரித்துக் கொள்ள வேண்டும்; சம்பளத்தைக் கொட்டிக் கொடுத்து, வீண் சச்சரவுகளையும் தலைவலிகளையும் வருவித்துக் கொள்ள வேண்டும்?' என்றே தோன்றும். மனிதர்களைக் கட்டி மேய்ப்பதை விட ஸ்விட்சைத் தட்டுவதே சுலபம் அல்லவா! இந்த மனப்பான்மை வளர வளர, வேலையில்லாத் திண்டாட்டம் பெருகும். மக்கள் அவதிப்படுவார்கள்.

எனவேதான் மன்மோகன்சிங், காந்திஜியின் தர்மகர்த்தா கொள்கையை தொழிலதிபர்களுக்கு நினைவூட்டியிருக்கிறார். "வேலை வாய்ப்புக்கள் பெருகவும் தாழ்த்தப்பட்டவர்கள் மத்தியில் நம்பிக்கை பிறக்கவும் ஏற்ற விதத்தில் நடந்து கொள்ளுங்கள்" என்று அறிவுரை வழங்கியிருக்கிறார். இதையெல்லாம் தொழில் துறை அதிபர்கள் கவனிக்காமல் போனால் மீண்டும் அரசு சில கட்டுப்பாடுகளைக் கொண்டுவர வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படலாம். எனவே தொழில்-வர்த்தகத்துறை தனக்குத் தானே சில நெறி முறைகளை வகுத்துக் கொள்வது நல்லது.

ஜெ.வும் சரி, ம.மோ.சி.யும் சரி, உபதேசிப்பதுடன் நில்லாமல் சில காரியங்களைச் செய்யவும் வேண்டும். உதாரணமாக, இன்று ஏற்றுமதியாளருக்கு ஏகப்பட்ட சலுகைகள் உள்ளன. உள்நாட்டுத் தேவைகளைப் பூர்த்தி செய்வோருக்கு இவை கிடையாது. இது பார்க்கப் போனால் 'ஒரு கண்ணில் வெண்ணெய்; ஒரு கண்ணில் சுண்ணாம்பு' கதைதான். போகட்டும். அந்நியச் செலாவணி நிலைமை திருப்தி அளிக்கும் போதேனும் இதை மாற்றலாம் அல்லவா? மாற்றி, வேலை வாய்ப்புக்களை அதிகரிக்கும் தொழில்களுக்குச் சிறப்புச் சலுகைகள்; தானியங்கு முறைகளைப் பயன்படுத்தும் தொழிலகங்களுக்கு அத்தகைய சலுகைகள் கிடையாது என்று ஏற்படுத்தலாம் அல்லவா?

வேலை வாய்ப்புக்களைப் பெருக்க இரு வழிகள் உள்ளன. ஒன்று, தொழிலகங்களைத் தோற்றுவிப்பது; இரண்டாவது, மனித சக்தியை அதிகமாகப் பயன்படுத்தும் தொழிலகங்களை உருவாக்குவது. சீனா, தனது மிகப் பெரிய செல்வம் மக்கள் தொகையே என்பதைப் புரிந்து கொண்டு இரண்டாவது மார்க்கத்தைப் பின்பற்றியது. இன்று தன்னம்பிக்கையுடன் நிமிர்ந்து நின்று அமெரிக்காவுடன் கூட பேரம் பேசுகிறது! அத்தகைய நிலை இங்கும் தோன்ற ம.மோ.சி. வழிகாட்டட்டும். தொழிலதிபர்கள் ஒத்துழைப்பு தரட்டும்.



# போதி

"உங்க பேரு..."

"ரேணுகா..."

டோக்கன் நம்பர் ஆறு என்று எழுதியிருந்தது. ஷைலஜா சிணுங்கினாள்.

"அப்பா..எப்போ வருவா..?"

"வருவார்...வா.. உட்காரலாம்...."

பழுப்பு நிற பாலிவினைல் இருக்கைகள்.

"போ..ரடிக்கும்மா.."

ஆறு வயசில் குழந்தைக்கு 'அலுப்பு' பரிச்சயமாகி விட்டது. நினைக்கும் போதே இப்போதைய சூழல் மீறி, சிரிப்பு வந்தது.

"டாக்டர் எப்ப வருவார்..?"

"ஆறு மணிக்கு..."

"உன் டோக்கன் என்ன நம்பர்? எங்கே காட்டு?"

"தொலைச்சிரக் கூடாது!"

மஞ்சளில் சதுரமாய் வெட்டப்பட்ட, கிளினிக் சீல் பதித்த டோக்கன். எழுதியிருந்த பெயரைப் படித்தாள் ஷைலஜா.

"ரே...ணு..கா..அப்ப நெஜம்மா உனக்குத்தானா டாக்டர்?" என்றது ஷைலஜா.

குழந்தையிடம் இப்போது தெளிவு தெரிந்தது. இதுவரை, ஒரு வேளை தனக்காகத்தான் வந்திருக்கிறாளோ என்று உள்ளூர பயந்து கொண்டிருந்தாள். இல்லையென்று உறுதியானதும் இப்போது சுறு சுறுப்பானாள்.

"உனக்கு எதுக்கும்மா?"

"ம்..."

குழந்தையிடம் என்ன சொல்வது?. எப்படிச் சொல்வது?

"சொல்லும்மா..."

ஷைலஜாவிடம் பிடிவாதம் அதிகம். சின்ன வயசில் சுலபமாய் திசை திருப்பலாம். வேறு விளையாட்டில் கவனம் மாற்றலாம். இப்போது அது செல்லுபடியாகவில்லை. அழுத்தமாய், கேட்க நினைத்ததை, செய்ய நினைத்ததைச் செய்த பிறகுதான் ஓய்கிறாள்.

''அப்பா..வராரா...பாரு..''

ஷோவில் வால்ட் டிஸ்னி பொம்மைகள். டாக் டாக்கென்று வெளியே ஓடினாள். ஓரே நிமிடத்தில் திரும்பினாள்.

''வரலேம்மா...''

இப்போது அவள் கேள்வி மறந்து போயிருந்தாள். கிளினிக் வாசலின் பூச்செடிகள், நடைபாதையில் உதிர்ந்த மலர்கள் என்று வேடிக்கை பார்க்க ஆரம்பித்தாள்.

ரகுவை இன்னும் காணோம். நிச்சயம் ஆறு மணிக்குள் வந்து விடுவதாக உறுதி சொல்லியிருந்தார். மணி இப்போது ஆறை நெருங்கிக் கொண்டிருந்தது.

டோக்கன் நம்பர் ஆறுதான். டாக்டர் வந்து, ஐந்து நபர்கள் போக எப்படியும் அரைமணிக்கு மேலாகும்.

ஆனாலும்...ரகு இந்த நிமிஷம் அருகில் இருந்தால் தேவலை என்று தோன்றியது.

டாக்டர் வேறு என்ன சொல்லப் போகிறாளோ..

நினைக்கும் போதே அடி வயிற்றைப் பிசைந்தது. சட்டென்று மனசு கனத்துப் போக...

ஷைலஜாவின் மீது பார்வையைத் திருப்பினாள்.

டோக்கன் கொடுக்கிற பெண்ணுக்குச் சுமார் இருபது வயசிருக்கலாம். வெள்ளை உடை. தலைமுடியை அழுந்த வாரியிருந்தாள்.

ஷைலஜா அவளருகில் போய் நின்று சிரித்தாள். சுலபமாய் சிநேகிதம் செய்து கொண்டு விடுவாள்.

நர்ஸ், தன் இடுப்பில் பால்பாயிண்ட் பேனாவைச் சொருகியிருந்தாள். ஷைலஜா அவளருகில் போய் நின்றதும் கன்னத்தில் செல்லமாய்த் தட்டினாள்.

''உன் பேரு என்ன...?''

# ரிஷபன்



''ஷைலஜா. ஆர். ஷைலஜா. ஃபர்ஸ்ட ஸ்டாண்டர்ட். ரெங்கா ஸ்கூல்..''

''ஓ ஸ்கூல் போறியா... என்ன ரேங்க்..?''

''ஃபர்ஸ்ட்'' என்ற ஷைலஜாவின் குரலில் கம்பீரம் தெரிந்தது.

''டாக்டருக்குப் படிக்கப் போறியா...?''

''ம்ஹூம்...மாட்டேன்...''

''ஏன்...?''

இருவருக்கும் இடையே நடக்கிற உரையாடலில் ரேணுகாவுக்கும் சுவாரசியம் வந்து விட்டது. ரகு வராமல் இருப்பது கூட உறுத்தவில்லை.

திடீரென கிளினிக் பரபரப்பானது.

கார் ஒன்று உள்ளே நுழையும் சத்தம் கேட்டது.

'டாக்டர் வந்தாச்சு..'

எல்லோரிடமும் சட்டென்று இறுக்கம் வர.. அவசரமாய்க் கதவைத் திறந்து, டாக்டர் உள்ளே நுழைய, கதவு மூடிக் கொண்டது. வேறு இருவர் கௌண்டரில் நின்று கொள்ள... டாக்டர் இருக்கும் அறை வாசலில் நர்ஸ் நின்று கொண்டாள்.

பஸ்ஸர் ஒலித்தது. கதவை மெல்லத் திறந்து, உறுதி செய்து கொண்டு முதல் டோக்கன் நபரை அனுப்பினாள்.

''இந்தச் சின்னக் கதை ஒரு மணி நேர டீ.வி. நாடகத்துக்குச் சரிப்பட்டு வருமா?''

''அரை மணி நேரம் வந்தாக்கூட போதும். மீதி நேரத்தை, இடை இடையே தடங்க லுக்கு வருந்தி ஓட்டிடலாம்!''

- ஞா. ஞானமுத்து



ரகு வந்து விட்டான்.

''என்ன ஆச்சு...?''

''நம்பர் சிக்ஸ்.. இப்ப தான் ஃபர்ஸ்ட் போயி ருக்கு...''

''ஹப்பாடி..''

பக்கத்து இருக்கையில் அமர்ந்தான். நிறைய வியர்த் திருந்தான்.

'ஷைலு எங்கே...''

மறுபடி நர்ஸிடம் போய் விட்டாள் ஷைலஜா.

''அதோ...''

''ஒண்ணும் பிராப்ளம் இருக்காதே...''

ரகுவை எதுவும் பேசாமல் உற்றுப் பார்த்தாள். அவன் தலை தாழ்ந்து, பிறகு வேறு திசை பார்த்தது.

நர்ஸ் இப்போது இறுக்கம் விலகி இயல்பாகி விட்டாள்.

''ஏன் டாக்டருக்கு படிக்க மாட்டே..?''

ஷைலஜாவிடம் மறுபடி பேச ஆரம்பித்து விட்டாள்.

''பிடிக்கலே...''

''அதான்...ஏன்...?''

''அம்மா வயித்துல.. ஒரு குட்டிப் பாப்பா இருக்காம்.. அதை.. உங்க டாக்டர்கிட்டே காட்டி, அழிக்கப் போறாங் களாம். ரப்பர் வச்சு எரேஸ் பண்ணுவேனே.. நோட்புக்ல.. அதுமாதிரி கத்தி வச்சு... பண் ணுவாங்களாம்.. என் ஃப்ரெண்டு ஸ்ரீராம்தான் சொன்னான், ஸ்கூல்ல. அவங்கம்மாவுக்கும் அப்படித்தான் பண்ணாங்களாம். பாவம் இல்லே, பாப்பா.. நான் டாக்டராக மாட்டேம்ப்பா!''

ஒரு நிமிஷம் ஹால் ஸ்தம்பித்தது. எல்லோரும் குழந்தையையும், ரகு-ரேணுகாவையும் மாறி மாறிப் பார்த்தனர்.

''ஏய் ஷைலு.. இங்கே வா...''

கடந்த ஒரு வாரமாய் விவாதித்து அலுத்துப் போன ரேணுகா வுக்கு இப்போது அழுகை பிரிட்டது.

''வே...ணாங்க.. டாக்டரைப் பார்க்க வேணாம்.. போயிரலாம்.. பரவாயில்லே.. இதுவும் இருக்கட்டும்...''

ரகு மௌனமாய் எழுந்து ஷைலஜாவைப் பற்றிக் கொண்டான். மூவருமாய் டோக்கனைக் கொடுத்துவிட்டு வெளியே நடந்தனர்.



''பெண் ரொம்பப் பொறு மைசாலின்னு எதை வெச்சுச் சொல்றீங்க?''

''டீ.வி.யிலே வர்ற வயலும் வாழ்வும் உள்பட எல்லாவற் றையும் பொறுமையா பார்ப் பான்னா பார்த்துக்கங்களேன்!''

- குமார்



# இந்து

கதை யாவது? வெங்காயமாவது? இது ஓரட்டி ஸ்பெஷல். பிரபு தேவாவை ஹீரோவாக்கி, களுக்கெடுத்திருக்கிறார்கள். ஆடுகிறாரோ, ஆடுகிறாரோ, ஆடுகிறாரோ - அப்படி ஓர் ஆட்டம்! தியேட்டரில் பறக்கும் விசில்களில் செவிப்பறை கிழியாதது ஆச்சர்யம்.

பொள்ளாச்சி சந்தையில் மூட்டை தூக்கும் நாலு இளைஞர்கள் - ஒரு நண்பி (புளித்துப் போன புது வசந்தம்). கதை நகர்த்த வாகாய் அவன் பணக்கார அநாதை. போதாதா?

பிரபுதேவாவுக்கு, கொஞ்சம் போல் நடிக்க வருகிறது. (அழுவது மட்டும் எம். ஜி. ஆர். ஸ்டைல்.) சண்டை கூட டான்ஸ் ஆடிய படியே போடுகிறார். ஆக்ரோஷ சிகாமணிகளாகவே பார்த்த கண்களுக்கு இது நிச்சயம் வெரைட்டிதான்.

அதெதுக்குடா சாமி, அந்த மெட்ராஸ் விஜயம்? மாமா ஃபாரினிலிருந்து வருகிறார் என்று ரோஜா இவர்களைக் கூட்டிப் போக - அடுத்தடுத்து ஆயிரமாயிரம் அபத்தங்கள். பெண்களை 'உச்' கொட்ட வைக்க நினைத்துச் சில செண்ட்டிமெண்ட் சொதப்பல்கள். விரவி வரும் வக்கிர வசனங்களை எந்த ஒரு காலேஜ் பையனும் பெண்ணும் விரும்ப மாட்டார்கள் என்பதற்கு நாம் உத்தரவாதம்.

ஓரிரு சீன்களில் வந்தாலும் சரத்குமார், போஸ்ட் ஆபீஸ் முத்திரை மாதிரி பச்சக் என்று பதிகிறார். காதலிக்கும் கேரக்டர்களைவிட காதலர்களைச் சேர்த்து வைக்கும் கேரக்டர் அவருக்கு வெகு பொருந்துகிறது. இனிவரும் இயக்குநர்கள் கவனிப்பார்களாக.

பழைய ட்யூன்கள். கரும்பச்சை வரிகள்; ரசிக்கும் கும்பலைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்!

கேமராக்காரர் அசோக்குமாருக்கு என்ன ஆயிற்று? படம் முழுக்க out-of-focus இல் எடுத்தாற்போலத் தெரிவதை ஏன் யாரும் கவனிக்கவில்லை?

தந்தம் புத்திர சிகாமணிகளின் மேல் அக்கறையுள்ள பெற்றோர்கள், தப்பித் தவறியும் தியேட்டர் பக்கம் அவர்கள் தலை வைக்க அனுமதிக்காதீர்கள். விரச மகோத்ஸவம் நடத்தியிருக்கிறார்கள்.

- ஆர். பி. ஆர்.

# 3

"இது என்னோட தோஸ்த் கோகுல் ராய். ஆளைப் பார்க்க கொஞ்சம் அதிசயமாய்த் தெரிவான். உள்ளம் வெள்ளை. மனம் தங்கம்."

"நான் உங்களோட பேசி என்னோட நேரத்தை வேஸ்ட் பண்ண விரும்பலை."

"டைம் எடுத்தால்... உனக்கு நன்மை பயக்கும்."

"என்ன நன்மை?"

"கோகுல் உன்னை டெய்லி தொடர் வான்."

"எதுக்கு?"

"சொல்றேன்.. கம்பெனியிலே உனக்கு என்ன வேலைன்னு சொல்லியிருக்காங்க பிரகாஷ்?"

"ஒரு வாரம் ஆபீஸ். அதன் பிற்பாடு பார்ட்டிகளைப் பார்க்கப் போக வேண் டும்."

"பார்த்து?"

"ஆர்டர் ஃபார்ம் கொண்டுட்டுப் போக ணும். அவங்களோட தேவைகளைக் கேட்டு ஆர்டர் வாங்கிட்டு வந்து... மறுபடியும் சரக்கு கொண்டு போய்க் கொடுத்துட்டு வரணும்."

"நோ ப்ராபளம். உன்னோட ஒத்து ழைப்பு தேவைப்படுவது இப்படித்தான்: என்னிக்கு நீ மால் கொண்டு போய் கொடுக் கப் போறியோ.. அன்னிக்கு கோகுல் போலி மால் கொண்டு வருவான். மாத்திக்கணும்.

# நரக



ஒவ்வொரு தடவையும் இப்படி பண்ட மாற்று நடக்கும் போது மாலோட அளவைப் பார்த்து உனக்குச் சன்மானம் வழங்கப்படும்..''

''நிஜ சரக்குக்குப் பதிலா போலியை டெலிவரி பண்ணச் சொல்றீங்க.''

''அதுவேதான்...''

''நான் உங்களோட திட்டத்துக்கு ஒப்புக்க மாட்டேன். கோல்மால் செய்து பிழைப்பு நடத்த வேண்டும் என்கிற நிலை எனக்கு இல்லை.''

''பிரகாஷ்! யோசனை பண்ணிப்பார்! ஆயிரம் ரூபா சம்பளத்துல நேர்மையாய் உழைத்தாயென்றால் வாழ்க்கை துவண்டு விடும்... நான் உன்னை இன்னொரு நாள் தொடர்பு கொள்கிறேன்...''

''தேவையே இல்லை. நான் ஒப்புக் கொள்ளப் போவதில்லை.''

''அவசரமில்லை; யோசி. நாலு, அஞ்சு நாட்கள் போகட்டும். அப்புறம் பார்க்கிறேன்.''

இருவரும் நகரும் வேளையில் கோகுல் நன்றாகச் சிரித்தான். நீண்ட நாள் பழகியவர்கள் போல கை அசைத்துவிட்டுப் போனார்கள். 'இந்த இரு பேர்வழிகளையும் மறுபடி காணப் போகும் சந்தர்ப்பத்தில் கண்டிப்பாக நழுவிவிட வேண்டும்' என்று தீர்மானம் செய்து கொண்டான், பிரகாஷ். பார்க்கப் போனால் இந்த வேலையே அவனுக்குப் பிடிக்காத ஒன்று. வீட்டில் கம்மா உட்கார்ந்திருக்கக் கூடாது என்ற அப்பாவின் சட்டத்துக்கும், நிஷாவின் அன்புக்கும் கட்டுப்பட்டுத்தான் சேர்ந்தான். இப்போதும் ஷில்பா என்ற அந்த கம்பெனியின் நற்பெயருக்குக் களங்கம் ஏற்படுமோ என்று அவன் தயங்கவில்லை. சரக்கு மாற்றும் திட்டத்தைக் கண்டிப்பாக மறுத்தது, அவனுடைய பிறவி நேர்மைக்குச் சாட்சி.

வீடு திரும்பிய சமயத்தில் டி.வி.யில் மகாராஷ்டிரா கிராமப் பெண்கள் 'அம்ச்ச... அம்ச்ச..' என வசனம் பேசி ஆடிக் கொண்டிருந்தார்கள்.

''என்ன லேட்?'' என்றாள் தாய்.

''நேரா வர்றேன்...''

''காப்பி தரட்டுமா?''

''உம்...''

''கேக் சாப்பிடு..கொண்டு வர்றேன்..''

பாத்ரூம் போய் முகம் அலம்பிக் கொண்டான். உருவின டையையும், கழற்றிய சட்டையையும் குழப்பத்துடன் வீசி விட்டு, டி.வி.மீது தவழ்ந்த சினிமா பத்திரிகையைத் தொட்டுக் கொண்டு அப்பாவிடம் கேட்டான்.

''நிஷா வந்தாளா?''

''இல்லை.''

''போன் பண்ணினாளா?''

''இல்லை.''

''ஏன்?''

''எனக்கு என்ன தெரியும்.. நானும் உன்னைப் போல இப்பத்தான் வந்து உட்கார்ந்திருக்கேன்.''

பத்திரிகையில் கடைசிக்கு முந்தின பக்கத்தில் மாதுரி தீட்சித் ஆரஞ்சு கலர் மெல்லிய சன்யாசி உடையில், கவர்ச்சியாகத் தோன்றிக் கொண்டிருந்தார். அப்பாவும் அதே பக்கத்தைப் பார்க்க, வேறு பக்கம் திருப்பி விட்டான்.

பெனிட்டோ குமார்

இருபது ஆண்டுகள் அவர் ஊராட்சி மன்றத் தலைவராக இருந்தார். மற்றும் ராஜபாளையம் நகராட்சித் தலைவராகவும், வர்த்தக சபை நிறுவனராகவும், ராமகிருஷ்ணா சேவா சங்கத்தின் தலைவராகவும் இருந்தார். மற்றும் அவர் ராஜபாளையத்தின் முதல் கூட்டுறவு சங்கத்தையும், முதல் வர்த்தக வங்கியையும் நிறுவினார். காந்தி கலை மன்றத்துடன் அவர் கொண்டிருந்த தொடர்பு, பல கலைகளையும் நல் இசையையும் வளர்க்கப் பெரிதும் உதவியது.

அவருடைய நோக்கமே இன்றும் எங்களுக்கு ஊக்கமாகத் திகழ்கிறது. அவர் கண்ட மேலும் சில கனவுகள் இன்று நனவாகின்றன... திரு. பி. ஏ. சி. ராமசாமி ராஜா நூற்றாண்டு சமூக மையம், ராம்கோ தொழில் பயிற்சி நிலையம் மற்றும் ராம்கோ அப்போலோ மருத்துவ மையம் - இவை யாவும் அவருடைய நூறாவது பிறந்த நாள் விழாவின்போது தொடங்கப்பட இருக்கின்றன.

நம்பிக்கையில் பற்று வைத்த நல்லதொரு மாமனிதராக விளங்கினார் திரு. பி. ஏ. சி. ரீமசாமி ராஜா அவர்கள் - 'ஸ்ரத்தா மயோயம் புருஷா' - கீதை.



அமரர் பி. ஏ. சி. ராமசாமி ராஜா அவர்கள்
ராம்கோ குரூப் நிறுவனர்.

"அப்புறம்...அந்த ஆசாமியை இன்னிக்குப் பார்த்தியா?" அப்பா கேட்டார்."

"உம்..."

"என்ன சொன்னான்?"

"ஷில்பா கம்பெனிகாரங்க அடிக்கடி மால் கொடுத்து பார்ட்டிக்கு டெலிவரி பண்ண அனுப்புவாங்களாம். அப்படி அனுப்புகிற சமயங்களில் இந்த நபர் போலியான மால் கொண்டு வருவானாம். எங்கிட்ட இருக்கிற நிஜ மால் அவங்கிட்ட கை மாறிடணும். போலியான மால் எங்கிட்ட வந்துடணும்."

"அப்போ... போலியான மாலை பார்ட்டிகிட்டே கொடுத்துவிட்டால்.... பார்ட்டி சந்தேகப்பட்டு கம்ப்ளைய்ன்ட் பண்ணி.. கம்பெனி உன்மேல் நடவடிக்கை எடுக்க வேண்டி வரும்..."

"நான் அந்த நபர்கிட்ட பேசிட்டேன். அவன் தொடர்பே வேண்டாம்னு சொல்லி விட்டேன்."

"கரெக்ட். டு யுவர் டியூட்டி. எவனையும் கண்டு கொள்ளாதே!"

அம்மா காப்பி நீட்ட, ருசித்துப் பருகினான்.

மறுநாள் ஷில்பா கம்பெனியில் பாலேகர் வந்து, 'ஐ டிராப்ஸ்' பற்றி கலகலப்பாகக் கூறினார். 'ஜீவாதய ஷில்பா' என்ற பெயரை அதற்கு வைப்பதற்கு, டைரக்டர்களில் அண்ணன், தம்பிகள் இருவரும் சண்டை போட்டு ரிவால்வரைக் கூடத் தூக்கினார்கள் என்று சரித்திரக் கதை சொன்னார். 'காடராக்ட்' அறுவை சிகிச்சை செய்தவர்கள் இதனைப் பயன்படுத்தினால், பிரகாசமான பலன் கிட்டும் என்றார். பல பலன்தரும் மூலிகைகள், தேன், கற்பூரம் போன்ற உன்னதமான பொக்கிஷங்கள் கலந்த, ஒரு ஆயுர்வேதத் தயாரிப்பு என்று புகழ்ந்தார்.

"நாளை முதல் உங்களுக்கு ஃபீல்டு வொர்க்! இன்று மாலை திரும்பிப் போகும் வேளையில் நாலு பேருக்கும் அளவான 'சான்டுக்' சூட்கேஸ் ஒவ்வொன்று வழங்கப்படும். அதனுள்.. நம் கேட்லாக், ப்ரைஸ் லிஸ்ட், ஆர்டர் பார்ம் என அடுக்கி வைத்துக் கொள்ளுங்கள்."

தம்ஸ்-அப் பாட்டிலை நீளமாகக் காலி பண்ணிவிட்டு "எனி டவுட்ஸ்?" என்றார் பாலேகர்.

பிரகாஷ் தவிர்த்து மற்ற மூன்று பேரும், ஒருவரை ஒருவர் முந்திக் கொண்டு வினவினார்கள். அவர்களுடைய கடமை உணர்வு கண்டு பாலேகர் திக்குமுக்காடிப் போனார்.

"பிரகாஷ்! டோன்ட் யூ ஹாவ், எனி டவுட்ஸ்?"

"ஒன்லி ஒன்."

"வாட்?"

"ஷில்பா ஐ ட்ராப்ஸ்' அதாவது 'ஜீவோதய ஷில்பா'; அதற்கும் 'நேச்சுரோ' என்ற கேஸ் ட்ரபுளுக்குத் தரப்படும் பவுடருக்கும் என்ன சம்பந்தம்?"

"மிஸ்டர் பிரகாஷ்! ஒரு கம்பெனியோட இரண்டு ப்ராடெக்ட்டுக்கும் தொடர்பு இருக்கணும்னு நினைக்கிறது தப்பான அபிப்ராயம். ஆனாலும் உங்க கேள்வியில ஒரு பொருத்தம் இருக்கத்தான் செய்யுது. ஷில்பா பார்மசூடிக்கல்ஸ், ஷில்பா கெமிக்கல்ஸ்னு முதல்ல தனித் தனியா இயங்கி, தனித் தனியா தான் இரண்டு மருந்துகளையும் தயார் பண்ணினோம். பின்னால் இரண்டு நிறுவனங்களும் இணைந்து விட்டன."

அன்று அத்தனையோடு தன்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொண்டு போய் விட்டார் பாலேகர்.

அஜய்க்குக் கம்பெனியில் என்ன வேலை என்று யாரும் கணிக்க முடியாது. ஆனால் பாலேகர் இல்லையென்றால் அவனுடைய பிரத்யேக விதிமுறைகளின்படி தான் அனைத்தும் நடக்கும். அசாதாரணமான நிர்வாகத் திறமை அவனிடமிருந்தது.

நான்கு பேருக்கும் மாலையில் 'சான்டுக்' சூட்கேஸ்களைக் கொடுத்தான் அஜய். அட்டை ப்ரவுன் கலரில் அருமையான டிசைனில் அளவாக இருந்தது. பிரகாஷுக்குக் கொஞ்சம் பெருமையாகக் கூட இருந்தது.

ஆறுமணிக்கு நிஷா போன் பண்ணினாள். ஆப்பரேட்டர் இன்டர்காமில் அழைக்க, சேல்ஸ் கேபின் விட்டு ரிசெப்ஷனுக்கு விரைந்து பேசினான்.

"நேற்று ஏன் வரலை?"

"ஸ்லைட் ஃபீவர்."

"இப்போ எப்படி இருக்கு?"

"நோ ட்ரபுள்."

"இன்னிக்கு வருவாயா?"

"ஓ.கே. வேர் ஷெல் வீ மீட்?"

"குதுப்மினார் பக்கத்திலே இரும்புத் தூண் பார்த்துட்டு வந்ததிலிருந்து இப்படி ஆகிட்டார் டாக்டர்!"

- பாபுஜி



"சிவாஜி பார்க் வாயேன்..."

"கார் கொண்டு வர்றேன்."

"அப்போ எங்கே வருவாய்?"

"பாம்பே சென்ட்ரல் வர்றேன். பாதல்ல 'சாஜன்' போட்டிருக்கான்."

"பிக்சர் வேண்டாம் நிஷா! எவரெஸ்ட் பில்டிங்ல காரைப் பார்க் பண்ணிட்டு நில்!"

நிஷா கூலிங் கிளாஸ் போட்டுக் கொண்டு, தலை மயிரைக் கோதிவிட்டுக் கொண்டே நின்றாள். ப்ளு கலர் மிடி; புள்ளி புள்ளியாய்ச் சட்டை. தூரத்தில் நின்று பார்க்க தேவதை போல் தெரிந்தாள். நெருங்க நெருங்க, ரோஸ் தடவின அந்தக் கன்னங்களும், லிப்ஸ்டிக் இட்ட அந்த உதடுகளும் பிரகாஷோடு நிறைய பேசின.

"ரொம்ப அழகாய் இருக்கே நிஷா!"

"இருக்கட்டும்; போகலாம்."

"எங்கே?"

"டைம் ரொம்ப ஆயிடுச்சு? வீட்டுக்கே போகலாம்."

நிஷா லாகவமாக ப்ரீமியரைக் கையாண்டாள். சில சமயங்களில் ஸ்டியரிங்கிலிருந்து கையை எடுத்து, பாப் தலையைக் கோதி விட்டுக் கொண்டாள்.

"அப்புறம்...அந்த ஆளைப் பாத்திங்களா?"

"பார்த்தேன்..."

நிஷாவின் நித்யமான எழிலை ரசித்தபடி, எல்லா விவரங்களையும் எடுத்து வைத்தான். கூர்மையாகக் கேட்டுக் கொண்டாள். நெற்றியில் கோடுகள் போட்டு யோசனை செய்தாள்.

"உங்க அப்பா சொன்னது போல அப்படியே விட்டுடுங்க."

பாந்த்ரா செயின்ட் பீட்டர்ஸ் சர்ச் அருகில் டிராஃபிக்குக்குக் காரை நிறுத்தி, ஸ்டியரிங்கை அணைத்து முன்னுக்குச் சாய்ந்தாள். இதுதான் சமயம் என்று பிரகாஷ் அவள் கன்னத்தை நெருங்கினான். அவள் 'ப்ச்' என்று கொசு விரட்டி சிரித்தாள். மறுபடியும் அவன் அதே நோக்கில் இயங்க, அவள், அவனுக்கு எதிராக இயங்கினாள். இரண்டு பேரின் உதடுகளும் விபத்துக்குள்ளாகிவிட்டன.

"அப்பா தேட மாட்டாங்களா?" கேட்டான் பிரகாஷ்.

"பத்து மணிக்குதான் வருவேன்னு தெரியும்..."

"ஓப்பன் தியேட்டர் போகலாமா?"

"போவோம்..."

ஓப்பன் தியேட்டரில் படம் பார்த்துக் கொண்டே சமோசா தின்றார்கள். அமிதாப் பச்சனின் அதிகபட்ச கொலைகள் போரடிக்க, அரை வாசியில் வெளியில் வந்து விட்டார்கள்.

அடுத்த நாள் அலுவலகம் போனபோது, அவுட்டோர் டியூடி என்ற நினைப்பில் ஒரு ரகமான சந்தோஷத்தோடு போனான். அஜய்தான் பணிகளைப் பங்கிட்டு அளித்துக் கொண்டிருந்தான். நேர்மையான அதிகாரிகளை இரக்கமில்லாமல் டிரான்ஸ்ஃபர் பண்ணும் அரசியல்வாதி போல் மற்ற மூவரையும் உத்தரவு போட்டு அனுப்பி விட்டு கடைசியாகப் பிரகாஷிடம் வந்தான்.

"சாகர் ஏர்போர்ட் தெரியுமா?"

"தெரியும்..." என்ற போது அஜய்யை அவசர ஃபோன் என்று ஆபரேட்டர் அழைத்தான். ஓடினான்.

திரும்பி வந்தபோது காரியங்களில் அவசரம் காட்டினான் அஜய்.

"பிரகாஷ், ஒரு ப்ராப்ளம்..."

"என்னது?"

"பாலேகர் ஸாஹிப்... ஜுஹு பீச்ல ஹோட்டல் ஹாரிசன்ல ஒரு பார்ட்டியைப் பார்க்கப் போனார். அவரோட சூட்கேஸை மறந்து போய் வச்சுட்டுப் போய்ட்டார். இப்போ போன் பண்ணி அனுப்பி வைக்கச் சொல்றார். இம்பார்ட்டன்ட் டாக்குமென்ட்ஸ் இருக்கும். கொண்டு போய்க் கொடுத்துடறியா?"

"சரி... அட்ரஸ்?"

எழுதி வாங்கிக் கொண்டான்.

பாலேகரின் அந்த விநோதமான கறுப்புக் கலர் சூட்கேஸை எடுத்துக் கொண்டு வந்து, டாக்ஸியில் ஹோட்டல் நோக்கிப் போனான். சூட்கேஸின் கனம் அசாதாரணமாய் இருந்தது. டாக்குமென்ட்ஸ் இந்த கனம் கனக்குமா? யோசித்தான்.

(தொடரும்)



"சந்தோஷ் கொடுத்து வைத்தவன்டா!"

"எந்த விஷயத்திலே?"

"தினமும் சாயங்காலம் அவன் மனைவி ஆபீஸுக்கும் 'ஹாட் காஃபி' கொண்டு வந்து கொடுக்கிறாளே!"

- ராமநாதன்

# ஜி ஜில்மிஷ





அடடே...
தலைவர்
மேலே
என்ன
அக்கறை
பார்த்தீங்களா?!









அம்மாவுக்கு 104 டிகிரி டெம்பரேச்சர் இருக்கும்போது ஐஸ்க்ரீம் கொடுத்தியா?
இப்ப என்ன தப்பு நடந்து -போச்சு...? டெம்பரேச்சர் குறையட்டு -மென்னு கொடுத்தேன்...



மதி...

# கள்


சீக்கிரம் குடி... யாராவது பார்த்துட்டா காசு போட மாட்டானுங்க! பிச்சைக்காரப் பசங்க...






ஏண்டா ஃப்ரிட்ஜைத் திறந்து போட்டு வச்சிருக்கே?!
ரூமை AC பண்ணிப் பார்க்கறேன் – தப்பா...?


பிள்ளைகள் ஆசைப் பட்டுச்சேன்னு ஒரு கூல் டிரிங்ஸ் 7 ரூபான்னாக் கூட வாங்கிக் கொடுத்துட்டேன் பார்த்தீங்களா...!
COOL DRINKS
!!





* சாகித்ய அகடமியின் தலைவர் யு.ஆர். அனந்தமூர்த்தி, பரிசு வழங்குகிறார்.

# எழுபது ஆண்டுகள் காத்திருந்த காதல் கதை!

இவ்வாண்டு சமஸ்கிருத மொழி இலக்கியத்துக்காக சாகித்ய அகாதமி பரிசு வாங்கியிருப்பவர் ஜக்கு ஆழ்வார் அய்யங்கார். வயது என்ன என்று நினைக்கிறீர்கள்? 93! (இது விஷயத்தில் அகதமிக்கும் யாராவது விருது கொடுத்தால் தேவலை.)

கிடக்கட்டும், நாம் ஜக்கு ஆழ்வாரைப் பார்ப்போம். சமஸ்கிருதப் புத்தகத்துக்கு சாகித்ய அகாதமி விருது கிடைத்திருப்பது ஒரு ஆச்சர்யமென்றால், ஜக்கு ஆழ்வார் இந்நூலை (நாவல்) எழுதியது 1920ல் என்பது பிறிதொரு ஆச்சர்யம். ''அதற்கென்ன பண்ணுவது? வெளியானால் தானே நூல்கள், நூலாகக் கணக்கில் சேர்க்க முடியும்?'' என்று அகடமி கேட்க வாய்ப்பிருக்கிறது. ஏனெனில் இந்நாவல் 1920ல் எழுதப்பட்டாலும் நூலாக வெளியானதென்னவோ 1990ல் தான்.

தமது 16 வயதில் 'ஜவந்திகா' (காதல் கதை!) என்கிற இந்நாவலை எழுத ஆரம்பித்து, 18 வயதில் முடித்திருக்கிறார் ஜக்கு. எழுபது ஆண்டுகளுக்கு மேல் கையெழுத்துப் பிரதியாகவே வைத்திருந் திருக்கும் ஜக்கு, இதற்குச் சொல்லும் காரணம், ''லாபம் இல்லாததால், சமஸ்கிருதப் புத்தகத்தை யாரும் வெளியிட முன்வருவதில்லை!''

ஜவந்திகா தவிர ஜக்கு ஆழ்வார் இதுவரை இப்படி எழுதி 'வைத்திருக்கும்' புத்தகங்களின் எண்ணிக்கை 72. சில பல்கலைக் கழகங்களில் இவரது சில நூல்கள் பாடங்களாகியிருப்பதால் அவை மட்டும் இப்போது அச்சேறியுள்ளன!

''ஒரு நாளைக்கு இரண்டு அல்லது மூன்று மணி நேரம் எழுதுவேன். வருடத்திற்கு 1 அல்லது 2 நாவல் எழுதிவிடுவேன். அச்சேற்றம் பற்றியெல்லாம் யோசிப்பதில்லை'' என்கிறார் ஜக்கு.

இதிகாசங்களிலும், இலக்கியங்களிலும் முற்றுப்பெறாத பாத்திரங்களின் கதையைத் தொடர்ந்து எழுதி காவியமாக்குவது ஜக்கு ஆழ்வாரின் ஸ்பெஷாலிட்டி. இவரது 'பிரசன்ன காஷ்யபம்', காளிதாசரின் சாகுந்தலம் முடிந்த இடத்தில் தொடங்கு



* ஜக்கு ஆழ்வார்

கிறது! இதில் சகுந்தலை, போராட்டங்களுக்குப் பின்னர் மீண்டும் கண்வ மகரிஷியை அடைகிறாள்.
இதைப் படித்த டாக்டர் ராதாகிருஷ்ணன் சொன்னது: ''இப்போது தான் சாகுந்தலம் நிறைவு பெற்றுள்ளது!''

பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் தமிழ் நாட்டிலிருந்து கர்நாடகாவுக்குக் குடியேறிய குடும்பங்களுள் ஐக்குவுடையதும் ஒன்று. தாய்மொழி தமிழ்தான்! கன்னடத்திலும் நல்ல தேர்ச்சி. எனினும் எழுதுவது சம்ஸ்கிருதத்தில் மட்டுமே.

''பணம் கட்டி, பள்ளியில் படிக்க வசதியில்லை. என் அப்பா வேத பாடசாலையில் சம்ஸ்கிருத ஆசிரியர். அதனால் எனக்குப் படிப்பும், உணவும் இலவசம். படிப்பு முடிந்ததும் நான் படித்த பாட சாலையிலேயே ஆசிரியராகவும் பின்னர் பெங்களூர் சமஸ்கிருத கல்லூரியிலும் பணியாற்றினேன். எனவே தாய் மொழியை விட சமஸ்கிருதம் எனக்கு மிகப் பரிச்சயம். ஒரு மொழியின் இலக்கணத்தைத் தெளிவாகப் படித்து அறியாமல் அதில் இலக்கியம் எழுதக் கூடாது. அதனால்தான் நான் பிற மொழிகளில் எழுதுவதில்லை. எனக்கு ஆங்கிலம், அட்சரம் கூடத் தெரியாது.''

சென்ற ஆண்டு இறுதியில், கல்கத்தாவிலுள்ள 'பாரத் பாஷா பரிஷத்' என்ற இந்திய மொழிகளின் கூட்டமைப்பு இவரது படைப்பாற்றலை அங்கீகரித்து ''வெள்ளிப் புத்தகப் பரிசும்'', 11000 ரூபாய் பண முடிப்பும் அளித்து கௌரவித்திருக்கிறார்கள்.
பின்னர் தான் சாகித்ய அகதமி திரும்பிப் பார்த்திருக்கிறது.

எழுத ஆரம்பித்து, எழுபது ஆண்டுகளுக்குப் பிறகு அங்கிகாரம் கிடைக்கப் பெற்ற இவர், இது பற்றிச் சொல்வது:

''எழுதறவன் பரிசுக்காக எழுதக் கூடாது. கிடைத்தால் ஏற்றுக் கொள்வதில் தவறில்லை. இத்தனை நாள் கழித்து எனக்கு இந்த கௌரவம் கிடைத்திருப்பினும் சந்தோஷம் தான்!''

- கட்டுரை, படங்கள்: ரமணன்.

# மங்கையர் மலர்

## மே '94






ஈக்காடுதாங்கல், சென்னை - 97

# சுஜாதா

> "எல்லா கணவன் மனைவி சண்டைகளும்
> படுக்கையில் முடிகின்றன.
> எந்தப் படுக்கை என்பதில்தான்
> வேறுபாடு"- யாரோ.

**ப**ரிபூர்ண வீழ்ச்சி என்றால் அதுதான். சற்றுமுன்தான் என் கன்னம் சிவக்க அறைந்தவர் இப்போது அத்தனை சலுகைகளையும் எடுத்துக் கொண்டிருக்க, நானும் பைத்தியம் மாதிரி போதிய கொஞ்சல் வார்த்தைகள் கூட சேர்க்கிறேனே, இது வீழ்ச்சியில்லாமல் என்ன? பின் நான் என்ன செய்ய வேண்டும்? என் போன்றவர்கள் பிறந்ததற்கு இந்த அர்த்தம் ஒன்றுதான் என்று கடவுள் பணித்திருக்கிறபோது சண்டை, சச்சரவு எதற்கு? இதைக் கட்டாயம் கொடுக்க வேண்டும். நான் யார்? எதற்காகப் பிறந்தவள்? என்றாவது ஒரு நாள் வயிற்றைச் சாய்த்துக் கொண்டு ஸ்வெட்டர் பின்ன ஏற்பட்டவள் தானே? இதோ என்னை டில்லிக்கு அனுப்பப் போகிறார். அதற்குள் கர்ப்பமாக்கி அனுப்பி விடுவார். எனக்கு மடியில் ஒரு விளையாட்டுப் பொருள் கிடைத்துவிட, அவர் பணம் தேடலாம். பம்பாய் போகலாம். லண்டன் போகலாம். பெண்களுடன் சரசமாடலாம். என்ன பாழாய்ப் போன நியாயம் இது?

காலை எழுந்தபோது கவலையே இல்லாமல் குப்புறப் படுத்துக்கொண்டு கொஞ்சம் வாயைத் திறந்துகொண்டு சன்னமாக குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தவரை சற்றுநேரம் பார்த்தேன். குழந்தை போலத்தான் தூங்குகிறார். விழித்தால்தான் பொய் எல்லாம் துவங்குகிறது. எழுந்து பூசை அறைக்குப் போய் குங்குமம் அழிந்திருந்ததால் இட்டுக் கொண்டு, மாமியார் போட்டு வைத்திருந்த காப்பியைக் குடித்துவிட்டுக் குளிக்கப் போனேன்.

கதவை பலமாகத் தட்டினார். "ரேகா சீக்கிரம் குளி! எனக்கு ஆபீஸ் போகணும். அதிகமா தூங்கிட்டேன். ராத்திரி எழுப்பச் சொன்னேனே ஞாபகமில்லையா?" என்றார்.

"ரேகா ரேகா!"

'முதல் நாள் போட்ட சண்டையெல்லாம் என்ன ஆச்சு!எல்லாம் கான்ஸலா', என்று கேட்கத் தோன்றினாலும் நான் மெல்லத்தான் குளித்தேன். இரண்டு மூன்று முறை கதவைத்தட்டினார். நான் திறந்து "டவல்" என்றேன். டவலை நீட்டி அப்படியே என்னை ஈரமாகக் கட்டிக் கொண்டார். பல் தேய்க்காத வாயால் முத்தமிட்டார்.

"நான் மறுபடியும் குளிக்கணும்" என்றேன். பெரிசாகச் சிரித்தார்.

"பாலாஜி, என்னடா?" என்ற அம்மாவின் குரல்கேட்க, "ஒண்ணுமில்லைம்மா."

"சண்டை இல்லையே?"

"இல்லைம்மா, சமாதானம். படு சமாதானம்" என்று என் காதைக் கடித்தார்.

"போறது! சந்தோஷமா இருந்தா சரி."

**நா**ன் வெளியே வந்தபோது, இன்னிக்கு உனக்கு ஒண்ணு காட்டியே ஆகணும்! மத்யானம் பன்னிரண்டு மணிக்கு கோவை அனுப்பறேன். உன்னை பிக் அப் பண்ணிண்டு வரட்டும்! பயப்படாதே! மிக்கி வர மாட்டான். இது வேற சமாசாரம்" என்றார்.

அவர் ஆபீஸ் போனதும் " புதுசா கல்யாணம் ஆனவான்னா இப்படித்தான். அன்னியோன்யமா இருக்கிறதை பார்க்கறது எவ்வளவு சந்தோஷமா இருக்கு! எதுக்காக போய் சின்ன விஷயத்துக்கெல்லாம் சண்டை போடறே?" என்றாள் மாமியார்.

"நான் இவ கூட பேசலாமா?" என்றார் மாமனார், தன் மனைவியிடம்.

"தாராளமா பேசலாம்! கல்மிஷம் இல்லாம இருந்தா யார் பேச வேண்டாம்ங்கறா? என்னவோ நான்தான் இந்தாத்துல

# வண்ணத்துப்

# 17

வில்லன் மாதிரி.''

''இல்லைம்மா நீ கலபத்தில தப்பா எடுத்துண்டுடுவேன்னு... ரேகா, நீ என் டாட்டர் காயத்ரி மாதிரி. நாங்க சொன்னதெல்லாம் உன் நன்மைக்காகத்தான். எந்த அப்பா, அம்மாவும் பிள்ளையும் மருமகளும் சண்டை போடறதை விரும்ப மாட்டா. அதனாலதான் நாங்க கோயமுத்தூருக்குப் போக எப்பவும் தயாராக இருக்கோம். இன்னைக்கே சொல்லு, போய்டறோம்.''

நான் சும்மா இருக்க, ''என்ன சொல்லு, போகணுமா?''

''அது உங்க இஷ்டம் அப்பா.''

''அப்பா! என்னை அப்பான்னு கூப்பிட்டியே, அதுவே பெரிசு. பாரும்மா! யாரும் யாருக்கும் கெடுதல் நினைக்கறதில்லை, சந்தோஷமா இருக்கறதுக்குத்தான்...''

இத்யாதி இத்யாதியாக இரண்டு பேரும் மாத்தி மாத்தி டேல் கார்னிஜி உபதேசம் செய்ய, நான் எதும் உணர்ச்சி காட்டாமல் அதிகம் பதில் சொல்லாமல் கேட்டுக்கொண்டிருந்துவிட்டு அவர்கள் முடித்ததும் சட்டென்று வந்து கதவைச் சாத்திக் கொண்டேன்.



# பூச்சி வேட்டை

''இன்னும் அவனுக்கு கோபம் போகலை'' என்றாள் மாமியார்.

''இவனும்தான் முரடன். கொஞ்சம் நாசூக்காக இருக்கணும். அடிச்சது தப்பு''

''நீங்க அடிக்காத அடியா? பெல்ட்டால பாப்பட்லாவில எத்தனை விறு விறிருக்கேன்!''

''அம்மா பரதேவதை! ஒரே ஒரு தடவை பெல்ட்டை கழற்றி உதறினதை இன்னும் ஞாபகம் வெச்சிண்டிருக்கியே!''

''சிலதெல்லாம் உங்களுக்கு சட்டுனு மறந்து போய்டும்.''

கீதாஞ்சலி என் கணவரின் காரை எடுத்துக் கொண்டு என்னை அழைத்துச் செல்ல மத்யானம் பன்னிரண்டு ஐந்துக்கு வந்தாள்.

''எங்க போறோம்?''

''உன்னை முதல்ல ஒரு இடத்துக்கு அழைத்துப்போய்க் காட்டிட்டு லஞ்ச முடிச்சுட்டு நேர ஆபீசுக்கு கூட்டி வரச் சொன்னார் அர்ஜுன்.''

ஸி.ஐ.டி. காலனி என்று போட்டிருந்த ஒரு அமைதியான இடத்தில் ஒரு வீட்டை இடித்துக் கொண்டிருந்தார்கள். சகாய விலையில் கிரில், தேக்கு மரக்கதவுகள், சன்னல்கள், பழைய செங்கல்கள் கிடைக்கும் என்று போர்டு போட்டிருக்க, இடிபாடுகளை மறைக்கப் பெரிதாக கூரை வேய்ந்திருந்தார்கள்.

''என்ன இங்கே?''

''இங்கதான் டீலக்ஸ் ஃப்ளாட்ஸ் மார்பிள் ஆர்கேடுன்னு வரப்போறது. அதில ரெண்டு ப்ளாட்டுக்கு அர்ஜுன் பணம் கட்டிருக்கார். ஒன்னு அர்ஜுனுக்கு. ஆறு மாசத்துல ரெடியாய்டும்'' என்று ஒரு வண்ண வரைபடத்தை எனக்குக் காட்டி, மேஸ்திரி போல இருந்தவரிடம் அறிமுகப்படுத்தி வைத்தாள்.

மொத்தம் இத்தனை சதுர அடி, டிஷ் ஆன்டெனா வசதி, பேஸ்மெண்ட் பார்க்கிங், நீச்சல் குளம், ஜெனரேட்டர், லிப்ட் வசதி எல்லாம் சொன்னார். இன்னும் ஆறு மாசத்துக்கு அப்புறம் அந்த வீடு எப்படி உருவாகப் போகிறது என்பதை விளக்கியது வரை படம்.

''இதை எங்கிட்ட சொல்லவே இல்லையே அர்ஜுன்?''

''உனக்கு அனிவர்சரி ப்ரசெண்டா கொடுக்க இருந்தார். என்னவோ சண்டை வந்ததாமே, அதனால் இப்பவே சொல்லிடுன்னுட்டார்.''

''நாங்க சண்டை போட்டதை உங்கிட்டயும் சொல்லிவிடுவாரா?''

''சும்மா ஏதோ பேச்சு வந்தது.''

''வீட்டில பெட்ரூம்ல நடக்கிறது எல்லாமே சொல்லிவிடுவாரோ?''

''இல்லை'' என்றாள் கீதா, என்னை விநோதமாகப் பார்த்து.

''நீ கோவிச்சுக்க தயாரா இருக்கேன்னு தோணுது! பாரு, உங்க சொந்த விஷயத்துல நான் தலையிடறதா நெனைக்காதே ரேகா. நான் உன் கணவனுடைய அலுவலகத்தில் ஒரு சிப்பந்தி. உன் கணவன் எனக்கு மேலதிகாரி. அவர் கொடுத்த வேலையை முடிக்கிறேன். அவ்வளவு தான்.''

''நான் ஆபீசுக்கு வரலை. சாயங்காலம் அவரோட பேசிக்கிறேன்.''

''இல்லை, வந்துதான் ஆகணும்! கார் தேவைப்படும் அவருக்கு. பிடிவாதம் பிடிக்காதே ரேகா!''

''நீ யாரு, எங்களுக்கிடையில மத்யஸ்தம் செய்ய?''

அவள் அடிபட்ட பார்வையுடன் ''ஸாரி, நான் என் எல்லையை மீறிட்டேன்'' என்றாள்.

''நான் ஆட்டோவில் போய்க்கறேன். நீ காரை எடுத்துண்டு போ.''

''இல்லை ரேகா! ட்ராப் பண்ணிட்டு போறேன் வீட்டில.''

''வேண்டாம், நான் போறேன்.''







- எம். அசோக்ராஜா

''ப்ளீஸ் என்கடமையை செய்ய விடு. ரேகா ப்ளீஸ்.... அர்ஜுன் கோவிக்கப் பார்.''

யோசித்துப் பார்த்ததில் இவள் மேல் கோபம் கொண்டு எந்த பயனும் இல்லை என்பது தெரிந்து, காரில் ஏறிக் கொண்டேன்.

**வீ**ட்டுக்குப் போனதும் மாமியார் எனக்காக சமைத்து வைக்காமல் எல்லா பாத்திரங்களையும் ஒழித்து வைத்திருந்தார்.

''என்ன ரேகா சாப்ட்டாச்சா?''

''இல்லைம்மா.''

''அர்ஜுன் கூட சாப்பிடறதா சொன்னாளே ஜோ! அய்யோ, நான் எதும் வெக்கலையே'' அவர் குரலில் பதற்றம் தெரிந்தது.

''பரவாயில்லை'' என்று அறையில் போய்க் கதவைச் சாத்திக் கொண்டேன்.

கொஞ்ச நேரத்தில் ''ரேகா!ரேகா! ஓவல்டின், ப்ரெட் டோஸ்ட் ஏதாவது வேணுமா?''

பசித்தது. ''வேண்டாம்'' என்றேன்.

''சே! நான் ஒரு மண்டு! உனக்கும் ஒரு வாய் சேர்த்து பண்ணிருக்கணும்'' என்றாள்.

''பரவாயில்லைம்மா. எனக்கு பசியில்லை.''

''உடம்பு சரியில்லையா?''

''இல்லை, பசி இல்லை.''

''அவனை பார்த்தியா?''

''இல்லை.''

''எதுக்கு கூப்பிட்டானாம்?''

''உங்க பிள்ளையைக் கேட்டுக்கங்கோ'' வெளியே பெருமூச்சு கேட்டது. மாமனாரும் மாமியாரும் தழைய பேசுவது தெளிவில்லாமல் கேட்டது.

**ரா**த்திரி அவர் வந்த போது ''என்ன ரேகா, பாத்தியா என்றார்.

''பார்த்தேன். ஏன் என்கிட்ட முன்னாலயே சொல்லலை?''

''சர்ப்ரைஸா இருக்கணும்னு.''

உள்ளே போய் அம்மாவிடம் பேசிவிட்டு வந்தபின், வெளியே வந்தவர் வேறு மாதிரி இருந்தார். ''மத்யானம் சாப்பிடலையாமே?''

''இல்லை.''

''ஏன்?''

''என்ன கேள்வி? வீட்ல சாப்ட ஏதும் இல்லை, சாப்பிடலை!

''ஏம்மா, இவளுக்கும் சேர்த்து பண்ணினா என்ன குறைஞ்சு போய்டுவே? எனக்கு ஏற்கனவே இருக்கிற டென்ஷன் போதாதா?''

''ஜோதான் சொன்னா, இவ உன் கூடலஞ்ச சாப்பிடறதா...''

''ஆமா! சொன்னா ஜோ. எதுக்காக ரெண்டு பேரும் சேர்ந்து இப்படி சித்திரவதை பண்றிங்க என்னை?''

அப்பா, ''அவ மேல ஏண்டா பாயறே? நான்தான் வேஸ்ட் பண்ண வேண்டாம்னு அவளுக்கு பண்ணவேண்டாம்வேன். இதை ஒரு பெரிய இஷ்யுவா எடுத்துக்காதே பாலாஜி!''

இந்த சண்டையை ஒருவாறு எனக்குள் இருந்த சைத்தான் ரசித்தாலும் மனச்சாட்சி அதட்டியது.

என்னிடம் வந்து, ''அப்பாம்மா கிட்ட கூட ஃப்ளாட்டுக்கு புக் பண்ணிருக்கிறதை சொல்லலை! உன்கிட்ட முதல்ல சொல்லலாம்னா... இந்த ஜோ பைத்தியத்தை கம்மா இடத்தை மட்டும் காட்டிட்டு வா, நல்ல செய்தியை நான் சொல்றேன்னு சொன்னா, சஸ்பென்ஸை போட்டு உடைச்சுட்டா! அந்த இடம் பிடிச்சிருந்ததா. மொத்தம் பதினெட்டு லட்சத்துக்கு கமிட் பண்ணி முதல் தவணையை கொடுத்துட்டேன் ரேகா! எல்லாம் எதுக்காக? நானும் நீயும் சந்தோஷமா இருக்கறதுக்குத்தானே?''

''ரெண்டு ஃப்ளாட் வாங்கிருக்கிறதா சொன்னாளே ஜோ?''

''அது மிக்கிக்கு. புதுசா போர்ட் ஃபோலியோ கம்பெனி வெச்சிருக்கமே, அதில அவன்தானே பார்ட்னர்? அதில் பண்ண பத்து லட்சத்தைத்தான் முதல்ல இப்ப இன்வெஸ்ட் பண்ணிருக்கோம்!''

''வேண்டாம் திருப்பிக் கொடுத்துருங்க'' என்றேன்.

(தொடரும்)



''ஏண்டா தங்கச்சியை அடிச்சே?''
''பேப்பரிலே என் பரீட்சை ரிசல்டைப் பார்க்கும் போது 'செப்டம்பரில் தேடினாலும் கிடைக்காது'ங்கிறாம்மா!''

- எஸ். அனிதா

ஜில் சாம்ராஜ்ஜியமான அன்டார்ட்டிகா கண்டத்தை முதன்முதலில் புகைப்படங்கள் மூலம் உலகுக்குக் காட்டியவர், ஜப்பானிய புகைப்பட நிபுணர் யோஷிகாஜு ஷிராகாவா. (Yoshikazu Shirakawa - பொழுது போகாத நேரத்தில் உச்சரித்துப் பாருங்கள்) முன்னதாக, 'ஆல்ப்ஸ்', 'இமாலயா', 'அமெரிக்கக் கண்டம்' போன்ற இவரது புகைப்பட ஆல்பங்கள் சரித்திரம் படைத்தவை. ஆயினும் அன்டார்ட்டிகாவில் தமது அனுபவங்கள், ''விவரிக்க முடியாதவை, வித்தியாசமானவை'' என்கிறார் யோஷிகாஜு. 1991 முதல் 93 வரை, பூமியில் மனிதன் கால் சுவடுகள் படாத மிகப் பெரிய, கடைசி கண்டத்தைப் படமெடுத்து, தம் நீண்டநாள் தாகத்தைத் தணித்துக் கொண்டதாகச் சொல்கிறார் இவர். அவர் பேசுவதைக் கேளுங்கள்:

* டிரான்ஸண்டார்டிக் : மனிதக் கவடுகளற்ற 3000 அடி உயரப் பனிமலை.



* ஷிராகாவா

"அண்டார்டிகாவைப் புகைப்படங்களில் சிறைப்பிடிக்க, முதலில் இக்கண்டத்தில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளைத் தொகுத்தேன். ஏற்கெனவே இயங்கி வந்த ஆய்வு மையங்களின் உதவியும் ஒத்துழைப்பும் தாராளமாய்க் கிடைத்தது. இருப்பினும் அனைத்துத் தகவல்களும் சேகரித்து, அண்டார்க்டிக்கின் பூகோள அமைப்பை நான் நன்றாகப் புரிந்து கொள்ளவே இருபது ஆண்டுகள் பிடித்தது!

"என் ஆய்வுகளுக்கு உதவிடவும், பயணங்களுக்கு உதவிடவும்



* வேகத்தில் அங்கங்கே பனி உருகி, பனிப் பள்ளங்கள் உருவாகின்றன. ஒவ்வொன்றின் ஆழம் வரை 100 அடி.

* பனி அடுக்குகளில் பெண்குவின் ராஜ்ஜியம்...

# ஒரு ஜப்பானியரின் 'ஜில்' சாதனை!



இவனுடைய சித்த சுத்திக்கு ஸஹாயம் செய்கிறது. ஆனால் இதே லௌகிக விஷயங்களைத் தனக்கும் தன்னைச் சேர்ந்த குடும்பத்தவர்களுக்கும் பண்ணிக் கொள்கிறபோது அதிலே ஆத்ம ஸம்பந்தமாக எந்த லாபமும் சேராமலே போகிறது. காரணம் - தான், தன் மனுஷ்யர் என்பவர்களுக்குச் செய்வது தனக்கே பண்ணிக் கொள்ளும் உபகாரம்தான். அதாவது, லௌகிகமான லாபம் இவனுக்கே கிட்டுகிறது. நிறையப் பணம் நஷ்டப்பட்டுப் பெண்ணுக்குக் கல்யாணம் பண்ணிப் பெரிய இடத்தில் ஒப்படைக்கிறான் என்றாலுங்கூட அதிலும் தம் பெண் நல்ல இடமாகப் போய் அடைந்தாளே என்ற ஸ்வய பாச திருப்தி என்ற லௌகிகமான ஸ்வய லாபம் இருக்கத்தான் செய்கிறது. லௌகிக லாபத்தைப் பிறத்தியானுக்குக் கிட்டப் பண்ணினால் அதற்குப் பிரதியாக இவனுக்கு ஆத்மலாபம் கிடைப்பதே நியாயம். லௌகிக லாபமே நேராக இவனுக்குக் கிடைக்கிறபோது அதற்குக் குட்டிப் போட்டுக் கொண்டு ஆத்ம லாபமும் எப்படிக் கிடைக்கும்?

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

திற்கும் (92 நவம்பர்) 712 டிரம் எரிபொருள் தேவையாயிருந்தது. எனில் மொத்த ஊசல் செலவைக் கணக்கிட்டுக் கொள்ளுங்கள்!''

''இரண்டாவது பயணம்- ஒரு 'கண்டம்' என்றே சொல்ல வேண்டும். கடும் குளிர்ப்புயலில் சிக்கிக் கொண்டோம். எலும்புகள் உறைந்து விடும் குளிர். என் திட்டப்படி ஒரு நாளில் முடியவேண்டிய பணிகளுக்கு 18 நாட்கள் பிடித்தன! என் விமானி ''இந்தக் குளிரில் நான் வந்தால் பைத்தியமாகி விடுவேன்'' என்று வீடு திரும்பி விட்டார். மாற்று ஏற்பாட்டில் வந்தவரும் 'மக்கர்' செய்தார். சமாளிப்பதற்குள் உயிர் போய் வராத குறைதான்.

''1993 பிப்ரவரி இருபதாம் தேதி எனது இரண்டாவது பயணம் வெற்றிகரமாக முடிந்தது. நானும் என் அணியினரும் அண்டார்டிகா தீபகற்பத்தில் சிலி நாட்டின் ரோடோல்ஃபோ மார்ஷ் என்ற தளத்துக்கு - அங்கிருந்துதான் புறப்பட்டோம் - ஒரு வழியாகத் திரும்பினோம்.

''மொத்தம் 12000 கிலோ மீட்டர்கள்... உலகச் சுற்றளவைப் போல மும்மடங்கு தூரம்...

''அண்டார்டிகா பற்றி எனக்குப் பல அற்புத நினைவுகள் உண்டு. அதன் அழகு- பிரும்மாண்டம், பயமுறுத்தும் சூழல் இவைகளை என்னால் மறக்கவே முடியாது'' என்று கூறும் ஷிராகாவாவின் பயணத்துக்கு கோனிகா முதலான சில ஜப்பானிய நிறுவனங்கள் முந்நூறு மில்லியன் யென்கள் கொடுத்து உதவின. நூறு மில்லியன் யென்களைத் தம் சொந்த செலவாக ஏற்று நானூறு மில்லியனுக்குள் பயணச் செலவை அடக்க திட்டமிட்டிருந்தார் ஷிராகாவா. ஆனால் செலவு கட்டுக்கடங்காமல் அறுநூறு மில்லியனைத் தொட்டிருக்கிறது! கூடுதல் தொகையைக் கடனாக வாங்கியிருக்கும் ஷிராகாவா அதை ஒரு பொருட்டாக நினைக்கவில்லை!

''இயற்கையின் சீற்றத்துக்கும் கம்பீரத்துக்கும் அப்பால் ஓர் அற்புத சக்தி இருப்பதை நான் உணர்ந்தேன். எத்தனையோ சாகசங்கள் செய்து இயற்கையைப் படம் பிடித்த போதிலும் மனித சக்தியை வெல்லும் ஒரு மஹா சக்தி இயற்கையில் வியாபித்திருப்பதைத்தான் நான் திரும்பத் திரும்ப தரிசித்தேன். அதைத்தான் என் காமெரா மூலமாக நான் பிறருக்கு உணர்த்த விரும்புகிறேன்'' என்கிறார் ஷிராகாவா.

அவர் படங்கள் அவர் சொல்லுக்கு சாட்சி என்பதை யாரால் மறுக்க முடியும்!

நன்றி : பஸிஃபிக் ஃபிரெண்ட்

**ப**ன்னீர்செல்வம் அன்றைய தலைப்புச் செய்திகளை வாசித்தான். வாத்தியார் வராத பீரியட்களில் இனி யாரும் கிரௌண்டுக்குப் போய் விளையாடிக் கொண்டிருக்க முடியாது. பக்கத்து ராஜமாணிக்க முதலியார் தோட்டத்தில் திருட்டுத்தனமாய் புளியங்காய் அடித்துத் தின்ன முடியாது. வயிற்றுவலி, இடுப்பு வலி என்று ஏதும் டபாய்த்து விட்டு, வீட்டுக்குக் கம்பி நீட்டிவிட முடியாது. இதுநாளாய் டிராயிங், எம். ஐ., குடிமைப் பயிற்சி என்றெல்லாம் டைம் டேபிளில் குறிக்கப்பட்டிருந்த, (ஆசிரியர்கள் ஓய்வெடுப்பதற்காக என்றே உருவாக்கப்பட்டிருந்த) வகுப்புகளை இஷ்டத்துக்கு அனுபவித்து வந்தது போல இனியும் முடியாது. இந்த வகுப்புகளை எல்லாம் மொத்த குத்தகை எடுத்துக் கொண்டு ஒரு வாத்தியார் வரப் போகிறார். இதுநாள் வரை, திருப்போரூர் மாணவர்களைக் கதற அடித்தவர். இப்போது இங்கே படையெடுத்திருக்கிறார். மாபெரும் ஓவியர். பிக்காஸோவிற்குப் பக்கத்து வீட்டில் குடியிருந்தவர். அவரது டிரான்ஸ்ஃபர், நமது பள்ளி மாணவர்களின் கலையுணர்வைத் தட்டியெழுப்புவதாக அமையும் என்று ஹெட்மாஸ்டர் நம்பிக்கை தெரிவித்திருக்கிறார். இதோ, இன்னும் சில மணித்துளிகளில் வந்துவிடப் போகிற அவரது முதல் இலக்கு. இந்த 'எய்த் பி'யாக அமையவதில் நாமெல்லாம் மட்டற்ற மகிழ்ச்சி அடையக் கடவோம்.

''என்னது? டிராயிங் மாஸ்டரா? கோலம் போடக் கத்துத் தருவாரா?''

மகளிர் அணியின் மகத்தான சந்தேகம்.

நான் அவசரமாக பாபுவைத் தேடினேன். நானும் அவனும் இன்றைய டிராயிங் பீரியடில் உப்பங்கழிக்குப் போவதாக இருந்தோம். மோகனசுந்தரமும் குடுமிநாதன் என்கிற பத்மநாபனும் உடன்



வருவதாகச் சொல்லியிருந்தார்கள். முன்னதாக பாபு, ஒரு தூண்டில் தயார் செய்து வைத்திருந்தான். இன்று என் கையால் ஒரு மீனாவது பிடித்தே தீருவது என்கிற வைராக்கியத்தில் இருந்தேன். இதுநாள்வரை, உப்பங்கழி ஓரத்தில் குடியிருந்தும் ஒரு மீன் பிடிக்கத் துப்பில்லாதவனாக இருந்தேன். தினம் ஒரு கமர்கட் வீதம் பாபுவுக்கு தட்சணை வைத்து, அந்தக் கலை நுணுக்கத்தை அறிந்து கொண்டு, இதோ இன்று செய்முறைக்காகக் களம் காணச் செல்ல எண்ணியிருந்த நேரத்தில் விதி, புது டிராயிங் மாஸ்டர் ரூபத்தில் குறுக்கிடுகிறது.

''இப்ப என்னடா பண்றது?''

''புது வாத்தியார்தானே? முதல் கிளாஸ் வேற. அட்டண்டன்ஸ் எடுத்துட்டு விட்டுடுவார் பாரு!''

**நா**ன் பாபுவைப் பெரிதும் நம்பியிருந்தேன். ஆனால் பி. எஸ். வீரப்பா மாதிரி ஒரு வித வில்லத்தனம் கலந்த கம்பீரத்துடன் புது



# வாத்தி

**பா. ராகவன்**

வாத்தியார், கிளாஸுக்குள் நுழைந்ததும் என் நம்பிக்கை தகர்ந்தது.

பள்ளிக்குப் புதியவர். மாணவர்களுக்கு மிகப் புதியவர். முதல் நாள். முதல் வகுப்பு. என்ன ஒரு இனிமையாய் நடந்து கொள்ள வேண்டும்? முதல் பார்வையிலேயே எனக்கு அவரைப் பிடிக்காது போயிற்று.

கரண்டி எண்ணெயைத் தலையில் வைத்து அழுந்த வாரி, நாலைந்து 'கோட்டிங்' பவுடர் பூசி, அகலமாக ஒரு சந்தனப் பொட்டும், நடுவே ஒரு குங்குமப் புள்ளியும், பஸ் ஹாரன் மாதிரி உப்பின வாயில் குதப்பும் வெற்றிலையும், பனியன் தெரிகிற நைலக்ஸ் ஜிப்பாவும், கையில் (ஐயோ!) ஒரு பிரம்புமாக அசப்பில் ஒரு தவில் வித்வானை நினைவுபடுத்தினார். நாற்காலி என்ற ஒரு வஸ்து இருந்தது அவர் கண்ணில் படவில்லை போலும். டேபிளில் ஏறி, சப்பணம் போட்டு உட்கார்ந்தார்.

''யார்றா இங்க லீடர்?''

கலியமூர்த்தி துடித்தெழுந்தான். இது நாள் வரை அவனை அத்தனை அதிகாரத்துடன் யாரும் விளித்ததாக நினைவில்லை. கடந்த மூன்று வருடங்களாக எட்டாம் வகுப்பு 'பி' செக்ஷனுக்கு அவன்தான் லீடராக இருந்து வருகிறான். உலகு உள்ள வரையும், காற்று உள்ள வரையும் அவன் எட்டாம் வகுப்பு 'பி' செக்ஷனில்தான் இருப்பான். லீடராகவும் அவனேதான் இருப்பான். வேறெதற்காக இல்லாவிடினும் அவனது ஸீனியாரிட்டிக்காகவாவது புது வாத்தியார், மரியாதை தந்திருக்கலாம்; தரவில்லை. அதற்குரிய பலனை அவர் அடைந்தே தீருவார்.

''உன் பேர் என்னடா? நீதான் லீடரா?''

''ஆமா சார்.''

''முதல்ல பேர் கேட்டேன்.''

''கலியமூர்த்தி சார்!''

''டிராயிங் பீரியட்னு தெரியுமில்லை?''

''தெரியும் சார்!''

''பின்ன போர்டு ஏன் க்ளீன் பண்ணாம இருக்கு?''

''டிராயிங் பீரியட்னா எங்களுக்கு பி. டி. பீரியட்னு அர்த்தம் சார்! நீங்க வருவீங்கன்னு தெரியாது சார்!''

'களுக்'கென்று ஒரு சிரிப்புச் சப்தம் கேட்டது. ஜான்ஸி ராணி.

''யாரது சிரிப்பு? பொட்டக் கழுதைக்குச் சிரிப்பு கேட்குதோ? எழுந்து நில், பெஞ்ச் மேல.''

ராணி அழுதபடி பெஞ்ச் மேல் ஏற, அந்தக்கணம் ஒட்டுமொத்தமாய் இந்த பி. எஸ். வீரப்பாவை எதிர்ப்பது என்று நாங்கள் முடிவு செய்து கொண்டோம்.

புது வாத்தியார், போர்டில் சில படங்

கள் வரைந்தார். யானை, கப்பல், ஏரோப் பிளேன், பம்பரம், சைக்கிள் இந்த மாதிரி.

தான் வரைந்ததோடு நிறுத்திக் கொண் டிருக்கலாம். யாராவது, என் போன்ற அறியாச் சிறுவர்களைப் பார்த்து வரையச் சொல்லித் துன்புறுத்துவார்களோ?

இதர ஆசிரியர்கள் பாடம் நடத்தும் போது, காது குடையும்போது, டேபிளில் தலை வைத்துத் தூங்கும்போதெல்லாம் அவர்களைப் பார்த்து, தத்ரூபமாய் வரையக் கூடியவன்தான் நான். என் கணக்கு நோட் டில் அதற்கு ஏராள சாட்சி இருக்கிறது. ஆனால் இவரது படங்கள், எனது எந்த வரை யறைக்கும் உட்பட்டதாக இல்லை. அவரது ஏரோப்பிளேன், ஒரு காக்கையைப் போலி ருந்தது. பம்பரம், ஒரு மொண்ணைக்கூழாங் கல்லை ஞாபகப்படுத்தியது. கடவுளே! இவர் பிக்காஸோவுக்குப் பக்கத்து வீட்டில் குடியிருந்து என்ன பிரயோஜனம்? ஒரு கோடு கூட நேராக இல்லையே?

இவ்விடத்தில், எனது ஓவியப் புலமை பற்றியும் சில வார்த்தைகள் சொல்லிவிட வேண்டும். எனது பக்கத்து வீட்டுப் பெண்ணும், என்னினும் இரண்டு வயது மூத்தவளுமாகிய வளர்மதிக்கு, அவ ளது ரெக்கார்ட் நோட்டை எழிலுடன் பராம ரிக்கும் மாபெரும் பொறுப்பை நான் ஏற்றி ருந்தேன். தவளையின் உடற்கூறுகள், ப்யூ ரெட், பிப்பெட், இயல்பியல் தராசும் எடைக்கற்களும் - போன்ற ஓவியத் துறைக் குச் சவால் விடக் கூடிய சில பல அரிய அறிவியல் பொருட்களை, பல்வேறு கோணங்களில் வரைந்து, அவளது மார்க்கு களைக் கணிசமாகக் கூட்டித் தந்திருக் கிறேன். தவிரவும் மயில் கோலம், மான் கோலம், தேர் கோலம் போன்றவைகளை என் அம்மாவின் மாதர் சங்க நோட்டுப் புத்தகங்களிலிருந்து, 'ஐயந்திரிபற'க் கற்றுத் தேர்ந்திருக்கிறேன். மீன் பிடிக்கும் ஆர்வம் தவிர, இப்படியான பல்வேறுதரப்பட்ட கலைப் பின்னணிகள் கொண்ட எனக்கு, புது வாத்தியாரின் 'ஸ்ட்ரோக்'குகள் கத்துக்குட் டித்தனமாகத் தெரிந்ததில் வியப்பில்லை.

ஆகவே, நான் அவரது படங்களைப் புறக்கணித்தேன். அவர் போர்டில் வரைந் திருந்த அதே உருவங்களை, தனித்துவம் மிக்க என் சொந்தக் கற்பனைத் திறனைக் கொண்டு, வரைந்து முடித்தேன்.

இதைப் பார்த்தபின் ஒரு நல்ல ஆசிரியர் என்ன செய்ய வேண்டும்? கூப்பிட்டுத் தட்டிக் கொடுத்து, பாராட்ட வேண்டும் தானே? தனது கற்பித்தல் முறைகளைப் புறக் கணித்து, தன்னிஷ்டப்படி வரைந்த எனது 'தான்தோன்றி'த்தனத்தை மிகக் கடுமையாக விமரிசித்தார். இனியொருதரம் இப்படி அதிகப்பிரசங்கித்தனம் காட்டினால் என்னை அவர் வகுப்பைவிட்டு வெளி யேற்றிவிடுவார். இது முதல் நாள். எனவே பத்து தோப்புக்கரணங்களோடும், மூன்று பிரம்படிகளோடும் நிறுத்திக் கொண்டார்.

ஒருவழியாக அன்றைய டிராயிங் பீரியட் முடிந்து, புது வாத்தியார் வெளியே போனதும் நாங்கள் மூச்சு விட்டோம். கலிய மூர்த்தி சிலிர்த்தெழுந்தான். இது பொறுப்ப தில்லை. இந்தக் கணமே இந்த அராஜகத் துக்கு முடிவு கட்டியாக வேண்டும். பழிக் குப் பழி. அத்தனை பேர் முன்னிலையில் அவனை அவர் அவமானப்படுத்தியிருக் கிறார். அவன், தன்னை நிரூபித்தாக வேண் டும். யாரங்கே, இரண்டு பேர் என்னோடு வாருங்கள். இந்தப் புது வில்லனின் ஜாத கத்தை அறிந்து வருவோம்.

மறுநாள் நான் சீக்கிரமே பள்ளிக்கு வந்துவிட்டேன். ஏனெனில், இன்றைய தலைப்புச் செய்திகள் வாசிக்கப் போவது கலியமூர்த்தி.

எனக்கு முன்னால் பாபு, பன்னீர், குடுமி, புஷ்பலதா, ராணி, ராஜாத்தி என் றொரு பட்டாளமே அங்கு திரண்டிருந்தது. கடவுளே, கலியமூர்த்தி தனது தொடக்க வுரையை இதற்குள் ஆரம்பித்து விட்டி ருக்கக் கூடாதே?

கலியமூர்த்தி சொன்ன ஏராள தகவல் களில் தேர்ந்தெடுக்கப்பட்ட முக்கியப் புள்ளி விவரங்கள் கீழே :

அவர் பெயர் பெருமாள். பெத்தபெரு மாள். தமது பதினேழு வருட ஆசிரியப்







- கி. சிவா

பணியில் இதுவரை இருபது ஸ்கூல்களுக்கு மேல் பார்த்து விட்டார். தண்டரையில் ஒரு தரம் பத்தாங்கிளாஸ் மாணவர்கள், தங்கள் அதிகபட்ச எதிர்ப்பைத் தெரிவிக்கும் வகையில் அவரது டப்பா சைக்கிள் டயரை பிளேடால் கிழித்திருக்கிறார்கள். டிராயிங் மாஸ்டர் உத்தியோகம் தவிர, அவரது சொந்த ஊரான தையூரில் ஓர் உரக்கடை வேறு வைத்திருக்கிறார். இதெல்லாம் சாதா தகவல்கள்தான். பரபரப்பான புதிய தகவல் ஒன்றும் உண்டு. அது, அவருக்கு இரண்டு மனைவியர் என்பதுதான்!

இதைச் சொன்னதும், வகுப்பு ஆழ்ந்த அமைதியில் மூழ்கியது. கஜேந்திரன் மெதுவாக, 'தேவியர் இருவர் முருகனுக்கு' என்று பாட ஆரம்பித்தான். பெண்கள், விநோதமாய் வெட்கப்பட்டுக் கொண்டு, வெளியே ஓடினர்.

"சீ, இப்பப் பாடாதடா. அவர் வர்றச்சே பாடு!"

இண்டர்வெல்லில், நான் குச்சி ஐஸ் வாங்க, கிரௌண்ட் தாண்டி, கோவளம் ரோடில் ஏற, எதிர் டீக்கடையில் பெத்தபெருமாள் உட்கார்ந்திருந்தார். ஒரு கையில் டீயும் இன்னொரு கையில் - ஐயோ, அது என்ன? சே! ஒரு வாத்தியார் பீடி பிடிப்பதா?

நான் சட்டென்று திரும்ப முயல, அவர் என்னைப் பார்த்து விட்டார்.

"லேய், இங்க வாடா?"

வந்தேன்.

"இங்கே என்னடா வேலை உனக்கு? போடா கிளாஸுக்கு!"

கிளாஸுக்கு வந்ததும் முதல் காரியமாக, கலியமூர்த்தியிடம் நான் பார்த்தது ஒன்றுவிடாமல் ஒப்பித்தேன்.

"நிசமாவா? சார், பீடி குடிக்கறாரா?"

"ஆமா கலி. ப்ரௌன் கலர்ல குண்டா, பெரிசா வெச்சிருந்தாரு."

"அப்ப அது பீடி இல்லை, சுருட்டு; இருக்கட்டும், எதுவா இருந்தால் என்ன? இது எப்பேர்ப்பட்ட தகவல்!" என்று கலியமூர்த்தி புளகாங்கிதப்பட்டுப் போனான். அதன் விபரீதம் அன்று மாலையே தெரிந்தது.

பாத்ரூமில் பெரிதாக பெத்தபெருமாளின் படம் வரைந்து, அதன் வாயில் ஒரு சுருட்டையும் கொடுத்து, கீழே 'பெத்தபெருமாள் ரயில் இஞ்சின் சர்வீஸ்' என்று சத்துணவுக்கூடத்திலிருந்து எடுத்து வரப்பட்ட கரியால் எழுதப்பட்டிருந்தது. படத்தைக் கொஞ்சம் கூர்ந்து நோக்கினால் கலியமூர்த்தியின் தனித்துவம் வாய்ந்த 'ஸ்ட்ரோக்'குகளைக் கண்டுகொள்ளலாம். பழிக்குப் பழி!

கலியமூர்த்தியின் இமாலய சாதனையை நாங்கள் வானளாவப் புகழ்ந்து கொண்டிருந்த நேரத்தில் பெத்தபெருமாள், பக்கத்து கிளாஸில் ருத்ரதாண்டவம் ஆடிக் கொண்டிருந்தார். யார் செய்த வேலை அது? மரியாதையாகச் சொல்லி விடுங்கள்!



"எனக்கு என்னம்மா இப்போ கல்யாணத்துக்கு அவசரம், இன்னும் கொஞ்ச நாள் போகட்டுமே?"

"ஏன்டா, அக்கம்பக்கத்திலே என் வயசுல உள்ளவங்கள்லாம் அவங்கவங்க மருமகளோட சண்டை போடறதைப் பாக்கறப்போ எனக்கும் அதுமாதிரி சண்டை போடணும்னு ஆசையிருக்காதா?"

– டி. என். பாலகிருஷ்ணன்

இல்லையேல் விளைவுகள் விபரீதமாயிருக்கும்!

அவர், அடுத்ததாக என் கிளாஸுக்கும் வந்து விசாரித்திருக்கக்கூடும். ஒருவேளை தகவல் தந்தது நான் என்பதும் கைவண்ணம் காட்டியது, கலியமூர்த்தி என்பதும் அவருக்குத் தெரிந்து போயிருக்கக்கூடும். கடவுளுக்கு நான் நன்றி சொல்ல வேண்டும். பள்ளி விடும் மணி அடித்து விட்டார்கள். இனி மூன்று நாட்களுக்கு டிராயிங் பீரியட் இல்லை.

அடுத்த மாதத்தில் ஒருநாள் 'இன்ஸ்பெக்ஷன்' வந்தது. எங்கள் கேளம்பாக்கம் ஹைஸ்கூலைப் பொறுத்தவரை, அது ஒரு நாள் திருவிழா. இன்ஸ்பெக்டர், எந்த வகுப்புக்கும் எப்போதும் வருவார் என்று அறிவிக்கப்பட்டு, நாளெல்லாம் வகுப்பில் மௌனம் அனுஷ்டிப்போம். அந்த நாளில் பாடம் ஏதும் நடந்ததாக ஞாபகம் இல்லை. வாத்தியார்களும், டீச்சர்களும் அன்றைய தினம் ஸ்டாஃப் ரூம் அரட்டையைத் தவிர்த்து, வகுப்பில் பிரம்பு சகிதம் நடை பயின்றபடி இருப்பார்கள். முன்னதாக சில கேள்விகளும் அவற்றுக்கான பதில்களும் தரப்பட்டு நாங்கள் உருப்போட்டுக் கொண்டிருப்போம்.

அன்றைய, எங்கள் வகுப்புக்கான இன்ஸ்பெக்ஷன், டிராயிங் பீரியடில் நடைபெற்றதை - முதலில் எங்களுக்கு 'நேரம் சரியில்லை' என்பதாகத்தான் கருதினோம். ஆனால், நடந்தது வேறு.

வழுக்கைத் தலை இன்ஸ்பெக்டர், பி. எஸ். வீரப்பாவிடம் போர்டில் ஏதும் படம் வரையச் சொன்னார். அப்புறமென்ன? நாங்கள் அதனைப் பார்த்து வரைந்தாக வேண்டும்.

பெத்தபெருமாள் தமக்கே உரிய லாகவத்துடன், தமது பெரும் உடம்பால் போர்டு முழுதையும் மறைத்துக் கொண்டு, முதலில் பெரிதாக ஒரு கேள்விக்குறி போட்டார்.

பின், சில குறுக்கு, நெடுக்குக் கோடுகளையும், ஒரு சைபர், ஒரு 'V' இவற்றையும் சேர்த்து அதனை ஒரு வாத்தாக மாற்றினார். பையன்கள் அசந்து போனார்கள். எனக்குப் புல்லரித்தது.

இந்தப் பள்ளிக்கு மாற்றலாகி வந்து, அவர் வரைந்த ஒரே உருப்படியான படம் அந்த வாத்தாகத்தான் இருக்க வேண்டும். இன்றைய இன்ஸ்பெக்ஷனில் தன்னை நிரூபித்துக் கொள்ளும் பொருட்டு, அவர் பல தினங்கள், இரவு கண் விழித்து இந்த மகத்தான கலைப் படைப்பை மனத்திற்குள் உருவாக்கியிருக்கக்கூடும். நான் மனத்திற்குள் பெத்தபெருமாளுக்கு ஒரு சபாஷ் போட்டேன். போகட்டும். வசிஷ்டர் வாயால் பிரும்மரிஷி.

ஆனால் விதி யாரை விட்டது? இன்ஸ்பெக்டர் ஒரு ஞானசூன்யமாக இருக்க வேண்டும் என்று பிற்பாடு ராஜாத்தி தன் தோழியரிடம் சொல்லிக் கொண்டிருந்தாள்.

''நீங்க என்ன வரைஞ்சிருக்கீங்கன்னு கொஞ்சம் சொல்ல முடியுமா?''

''வாத்து.''

''இதுவா? எனக்கென்னமோ வான் கோழி மாதிரி தெரியறது!''

பெத்தபெருமாள் அரண்டு போயிருக்க வேண்டும். அவரையும் சதாய்க்க ஆண்டவன் ஒருவரை அனுப்பியிருக்கிறார்.

''ஏன் சார், கேள்விக்குறி போட்டு வாத்து, 'ந' போட்டு காக்காய், 'O' போட்டுப் பானை - இதுக்கு மேல ஒண்ணுமே தெரியாதா உங்களுக்கு? மைண்ட் யூ. இஸ் இஸ் நாட் ஃபர்ஸ்ட் ஸ்டாண்டர்ட். ஐ பிலீவ் இட் இஸ் எய்த்.''

இன்ஸ்பெக்டர் போய்விட்டார். ஏனோ, அன்று பெத்தபெருமாளுக்காக நாங்கள் துளி யூண்டு வருத்தப்பட்டோம்.

**கா**லம் உருண்டது என்று கதைகளில் படிக்கலாம். சினிமாவெனில், காலெண்டர் படபடவென தன் தேதிகளை மாற்றிக் கொள்ளும். நான் எப்படிச் சொல்ல? எத்தனையோ வருஷங்களுக்குப் பிறகு இன்று காலை பெத்தபெருமாள் சாரை எல் ஐ. சி. அருகில் பார்த்தேன்.

பார்த்ததும் ' அடையாளம் புரிந்து விட்டது. .பி. எஸ். வீரப்பாவை அத்தனை சுலபத்தில் மறந்து விடுவதா?

''சார்...!''

''யாரு...?''

''ஒரு நிமிஷம் இப்படி வர முடியுமா? நீங்க பெத்தபெருமாள் சார்தானே?''

''ஆமா... நீங்க...?''

''உங்க ஓல்ட் ஸ்டூடண்ட் சார். கேளம்பாக்கத்துல எய்த் பி சார். நீங்கதானே சார் எங்களுக்கு டிராயிங் மாஸ்டர்?''

பெத்தபெருமாள் என்னைப் பத்து தோப்புக்கரணம் போடச் சொன்னதோ மூன்று பிரம்படி கொடுத்ததோ இப்போது எனக்குப் பெரிய விஷயமாகப் படவில்லை.

அவர் முகம் விரிந்தது. ''கேளம்பாக்கம் எய்த் பி ஞாபகம் இருக்கு. ஆனா, நீங்க...?''

''கிருஷ்ணன் சார்! பன்னீர், பாபு, குடுமி செட் சார்!''

''எப்படி இருக்கேப்பா?''

''இருக்கேன் சார்! அன்னிக்கு உங்க வயித் தெரிச்சலைக் கொட்டிண்டும், இன்னிக்கு நல்லாயிருக்கேன் சார். உங்களுக்குத் தெரியுமா? பாத்ரூம்லே உங்க படம் வரைஞ்சி, என்னமோ எழுதி, பெரிய கலாட்டா வாச்சே, ஞாபகமிருக்கா சார்? அது எழுதினது கலியமூர்த்தி; ஐடியா கொடுத்தது நான் தான் சார்! சாரி சார்.''

பெத்தபெருமாள் சிரித்தார்.

''இப்ப ஞாபகம் வரது!''

''ரிடையராயிட்டீங்களா சார்?''

''ஓ.யெஸ். அன்னிக்கு இன்ஸ்பெக்ஷன் நடந்தது பாரு. மறுநாளிலேர்ந்து ஆறு மாசம் நான் மெடிக்கல் லீவ் போட்டேனில்லை? தொடர்ந்து வாலண்டரி ரிடையர்மெண்ட் எழுதிக் கொடுத்துட்டேன்.''

''ஏன் சார்?''

''அன்னிக்கு நடந்தது பாரு, சம்பவம்! சட்டுனு மனகல பட்டுது. அவமானம்னு இல்லை. ரொம்ப நாளாவே மனகல உறுத்தல். டிராயிங் மாஸ்டருக்கெல்லாம் நான் தகுதியானவனே இல்லை. எல்லாம் எழுதிவேன். இருந்தாலும் கிடைச்சது, ரெகமண்டேஷன்லதான்! சுமாரா படம் போட வரும். ஆனா எத்தனை நாள்தான் வெறும் காக்கா, குருவி படம் போட்டு பஜனை பண்ணிட்டிருக்க முடியும், சொல்லு!

''குடும்பம் பெரிசு. உர வியாபாரம் இருந்தும்கூட நிரந்தரமா ஒரு கவர்ன்மெண்ட் உத்தியோகம் இருந்தா, பின்னால பென்ஷனாவது வருமேன்னு ஒரு நப்பாசைலதான் வேலைக்கு வந்தேன். என்ன இருந்தாலும் மனசாட்சின்னு ஒண்ணு இருக்குதில்லையா?''

பெத்தபெருமாள் சிரித்தார். ஏனோ, எனக்கு அவரைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. வாழ்வதற்காக எத்தனை முகங்களை அணிய வேண்டியிருக்கிறது?

''போகட்டும். நீ என்ன பண்றே இப்போ?''

''அட்வர்டைசிங் ஏஜென்ஸி ஒண்ணு சொந்தமா நடத்தறேன் சார். டயம் கிடைக்கறச்சே, அவசியம் நீங்க வரணும்!''

விஸிட்டிங் கார்டை அவரிடம் நீட்டினேன். நான் எதிர்பார்த்ததைப் போலவே அவர் முகம் வியப்பில் விரிவதைக் கண்டேன்.

அந்தக் கார்டில், என் கம்பெனியின் 'எம்ப்ளமாக' நான் பொறித்திருந்தது, ஒரு வாத்து படம்.

கேள்விக்குறியிலிருந்து உருவான வாத்து.

# அமரர் கல்கி
# நினைவுச் சிறுகதைப் போட்டி-1994

முதல் பரிசு ரூ.1,500

இரண்டாவது பரிசு ரூ.1,000

மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ.500 வீதம்) ரூ.1,000

ஆக மொத்தம் ரூ.3,500 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 125 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.



● கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.

● அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் என்றும் உறுதிமொழி தர வேண்டும்.

● நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி: ஜூன் 15.

● உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.

● பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய அளவு தபால்தலை ஒட்டிய சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

● கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

● எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

● சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

● போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்டு 7 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

● எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

- ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.

'மெரி'
31 வருட நம்பிக்கை
யின் நிறுவனம்
வழங்கும் எழில்
கொஞ்சும்
ஆபரணங்கள்

கவர்ச்சி! புதுமை! நீடித்த உழைப்பு!!! இதுவே 'மெரி' தங்க கவரிங் நகைகளின் சிறப்பு! உங்களுக்கோர் பாதுகாப்பு!!
வெள்ளியில் தங்க கவரிங் செய்யப்பட்டு, அமெரிக்க டயமண்ட் (A.D.) பதிக்கப்பட்ட பொன் நிகர் நகைகள். V.P.P. மூலம் நகைகளைப் பெற நகைகளின் நம்பர்களைக் குறிப்பிட்டு எழுதுங்கள். பரதநாட்டிய செட்டுகளுக்கும் கெம்பு பரதநாட்டிய அணிகலன்களுக்கும் 'மெரி' நகைகள் தனிச் சிறப்பு வாய்ந்தவை.
இலவச கலர் கேட்லாக் பெற இன்றே எழுதுங்கள்!!

No:193 Rs. 300/50


No:27 Rs. 200/50


No:40 Rs. 175/50


No:881 Rs. 400/50 A. D.


No:258 Rs. 350/50


No:206 Rs. 300/50

No:257 Rs. 350/50


No:290 Rs. 300/50


A. D.
No:831 Rs. 300/50


A. D.
No:881 Rs. 400/50


No:145 Rs. 200/50


No:157 Rs. 300/50


No:147 Rs. 400/50


No:123 Rs. 200/50



No:85 Rs. 400/50


A. D.
No:907 Rs. 300/50


No:12 Rs. 200/50


No:42 Rs. 150/50


No:223 Rs. 600/50


No:74 Rs. 600/50


No:95 Rs. 400/50
No:62 Rs. 400/50


No:46 Rs. 200/50


No:37 Rs. 200/50


No:227 Rs. 300/50


No:265 Rs. 600/50


A. D.
No:830
Rs. 1250/50
A. D.
No:918 Rs. 300/50

MGC/117/94

# மெரி கோல்டு கவரிங் ஒர்க்ஸ்

தபால் பெட்டி: 1405, 18, ரங்காதன் தெரு, தி.நகர்
சென்னை 600 017. போன்: 444671, 442513

அமரர் கல்கி

# தியாக பூமி

## 54. நெடுங்கரைப் பிரயாணம்

பவனாறு மாடு பூட்டிய ரதத்தில் சம்பு சாஸ்திரி கழுத்தில் பூமாலைகளுடனும், பக்கத்தில் ஒரு குழந்தையுடனும் ஊர்வலம் வருவதைக் கண்டதும் தீக்ஷிதருக்கு ஒரே பிரமிப்பாய்ப் போய்விட்டது. "எப்படியும் தஞ்சாவூர் ஜில்லாக்காரனுடைய மூளையே மூளை! எப்படி ஊரை ஏமாத்திண்டிருக்கான் பார்த்தயா?" என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டார். "இந்தப் பொண்ணு ஒண்ணை எங்கே போய்ப் பிடிச்சான்?" என்று மனத்துக்குள் கேட்டுக் கொண்டார்.

ஊர்வலம் முடிந்து எல்லாரும் ஊர்ச் சாவடியை அடைந்தார்கள். அங்கே பொதுக் கூட்டம் நடக்க ஏற்பாடாகியிருந்தது. மரத்தடியில் பெரிய மேடை கட்டி, பாரத மாதா படத்தை வைத்து அலங்கரித்திருந்தார்கள். சம்பு சாஸ்திரியும் சாருவும் இன்னும் சிலரும் மேடையின் மீது அமர்ந்தார்கள்.

அந்தச் சமயத்தில் தீக்ஷிதர் கூட்டத்தில் புகுந்து இடித்துப் பிடித்துக் கொண்டு போய் மேடையருகில் வந்து சேர்ந்தார். சம்பு சாஸ்திரியைப் பார்த்து, "சாஸ்திரிகளே! சௌக்கியமா?" என்று கேட்டார்.

"அடடா! தீக்ஷிதர்வாளா? இங்கே எங்கே வந்தது? எதிர்பாராத விஜயமாயிருக்கிறதே?" என்றார் சம்பு சாஸ்திரி.

தீக்ஷிதரைப் பார்த்ததில் சம்பு சாஸ்திரிக்கு வெறுப்பும் சந்தோஷமும் கலந்தாற் போல் உண்டாயின. 'இந்த மனுஷர் இங்கே எங்கு வந்து சேர்ந்தார்?' என்று ஓர் எண்ணம்; 'இவரிடம் நெடுங்கரையைப் பற்றித் தகவல் தெரிந்து கொள்ளலாமே' என்று ஓர் ஆசை.

"ஆமாங்காணும்! உலகமெல்லாம் இப்ப உம்ம பேச்சாத்தானே இருக்கு? தமிழ் நாட்டு மகாத்மா காந்தின்னு கூட உம்மைப் பத்திச் சொல்றாளே? அப்பேர்ப்பட்டவர் நம்மூர்க்காரராச்சே, அவரைப் பார்க்கணும்னுதான் வந்தேன். உம்மகிட்டத் தனியா ஒரு விஷயம் பேச வேண்டியிருக்கு."

"அதுக்கென்ன! கூட்டம் முடிந்ததும் பேசலாம்" என்றார் சம்பு சாஸ்திரி.

கூட்டத்தில் வழக்கம் போல் வரவேற்புப் பேச்சுக்கள் முடிந்ததும், சாரு எழுந்திருந்து காந்தி பாட்டு ஒன்று பாடினாள். கூட்டத்திலிருந்தவர்கள் குழந்தையின் பாட்டை ரொம்பவும் ரசித்து ஆனந்தித்தார்கள்.

பின்னர், சம்பு சாஸ்திரி எழுந்திருந்து பேசினார். பழைய நாட்களில் பாரத தேசம், எவ்வளவு பெருமையுடன் இருந்தது என்பதை எடுத்துச் சொன்னார். தேசம் தற்சமயம் க்ஷீணமடைந்திருப்பதை எடுத்துக் காட்டினார். இந்தத் தேசத்தைப் புனருத்தாரணம் செய்வதற்கு மகாத்மா காந்தி அவதாரம் செய்திருக்கிறார் என்று சொன்னார். ராமாயணம், கீதை முதலிய நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டி, நம்முடைய பெரியவர்கள் சொல்லியிருப்பதைத்தான் காந்தி மகானும் சொல்கிறார் என்று எடுத்துக் காட்டினார். பிறகு வர்ணாசிரம தர்மம் என்பதை நம் பெரியோர்கள் என்ன நோக்கத்துடன் ஏற்படுத்தினார்கள் என்பதை விவரித்தார். சாதிகளில் உயர்ந்த சாதி, தாழ்ந்த சாதி என்று கிடையாதென்றும், ஒரு வகுப்பாரைத் தீண்டாதவர்கள் என்று ஒதுக்கி வைக்கச் சாஸ்திரத்தில் இடமில்லையென்றும் ருசுப்படுத்தினார். கடைசியில் மதுபானத்தின் தீங்கை எடுத்துச் சொல்லிப் பேச்சை முடித்தார். உள்ளூர்க்காரர்கள் வந்தனோபசாரம் சொன்ன பிறகு பிரமாதமான உற்சாகத்துடனும் ஜய கோஷங்களுடனும் கூட்டம் கலைந்தது.

பிறகு, சம்பு சாஸ்திரி, தீக்ஷிதரைத் தனியாக அழைத்துச் சென்று, "என்ன சமாசாரம்



தீக்ஷிதர்வாள்! தனியாய்ப் பேசவேணும் என்றீர்களே?'' என்று கேட்டார்.

''ஓய் சம்பு சாஸ்திரி! உம்ம குட்டை எல்லார் மத்தியிலும் உடைச்சுவிடலாம்னு பார்த்தேன். போனால் போறது, நம்ம ஊர்க் காரனாச்சேன்னு விட்டேன்; தெரியுமாங் காணும்?'' என்றார் தீக்ஷிதர்.

''குட்டை உடைக்கிறதா? என்ன சொல் றேள், தீக்ஷிதர்வாள்? எனக்கு ஒன்றும் புரிய லையே?''

''உமக்கு ஏங்காணும் புரியும்? பெரிய அழுத்தக்காரராச்சே நீர்? ஆமாம், எவ்வளவு ரூபாய்ங்காணும் சேர்த்திருக்கிறீர் இது வரைலே? ரொக்கமாய்ப் பத்தாயிரமாவது இருக்குமா?''

''ரொக்கமாவது, பத்தாயிரமாவது? நான் பணஞ் சேர்க்கறதுக்காக இப்படிக் கிளம்பினேன்னு நினைச்சண்டயளோ?''

''அப்பாடா! இந்தப் பூனையும் இந்தப் பாலைக் குடிக்குமான்னு பேசமாட்டீரா நீர்? சொல்லாத போனால் போம்.... பொண் ஒண்ணை அழைச்சண்டு வந்திருக்கிறீரே? அதை எங்கே புடிச்சீர்? அதையாவது சொல் வீரோ, மாட்டீரோ?''

''குழந்தையா? பராசக்தி கொடுத்தாள், தீக்ஷிதரே!'' என்று சாஸ்திரி சொல்லி விட்டுப் புன்னகை புரிந்தார். அந்தப் புன்ன கையில், இதை இந்த மனுஷர் எங்கே நம்பப் போகிறார் என்ற பாவம் தோன் றிற்று.

''பராசக்தி கொடுத்தாளா?'' என்று தீக்ஷிதர் ஒரு நீட்டு நீட்டினார். ''அப்படி அடியுங்காணும் ஓர் அடி! ஓய் சம்பு சாஸ்திரி! பலே கெட்டிக்காரர் ஆயிட்டீருங் காணும் நீர்!'' என்றார்.

''தீக்ஷிதர்வாள்! ஏதோ சமாசாரம்

சொல்லணும்னேளே? அதைச் சொல்லுங்களேன்? எல்லாரும் எனக்காகக் காத்திண்டிருக்காளே?'' என்று சம்பு சாஸ்திரி கேட்டார்.

''சொல்றேங்காணும், சொல்றேன்! உம்ம ஆம்படையாள் இருக்காளே மங்களம், அவள் அங்கே சாகக் கிடக்காள். நீராவா, இங்கே மீட்டிங்கு பேசறீர், மீட்டிங்!''

சம்பு சாஸ்திரிக்குப் பகீர் என்றது. சாவடிக்குப்பத்தில் இருக்கும்போதே, மங்களம் என்ன செய்கிறாளோ என்னவோ என்று சில சமயம் சம்பு சாஸ்திரி எண்ணுவதுண்டு. அவள் விஷயத்தில் நம்முடைய கடமையில் தவறிவிட்டோமோ என்ற எண்ணம் அவர் மனத்தில் அடிக்கடி தோன்றி வருத்துவதுண்டு. இப்போது, ''மங்களம் சாகக் கிடக்கிறாள்'' என்றதும், அவர் இருதயம் படீர் என்று வெடிக்கிறாப் போல் இருந்தது.

''நிஜமாகவா, தீக்ஷிதர்வாள்! விளையாடறேளா?'' என்று கேட்டார்.

''உம்மோடே வந்து விளையாட வர்றேன்! நீரும் பச்சைக் குழந்தை; நானும் பால்யம். இரண்டு பேரும் விளையாட வேண்டியதுதான்! நீர்தான் விளையாட்றதுக்குன்னு ஒரு குட்டியைப் பிடிச்சு இழுத்துண்டு வந்திருக்கீர்! எனக்கென்னங்காணும் விளையாட்டு?''

சம்பு சாஸ்திரி, தீக்ஷிதரின் இந்த அசந்தர்ப்பப் பேச்சைக் காதிலேயே வாங்கிக் கொள்ளாமல், ''இல்லை, தீக்ஷிதர்வாள்! மங்களம் அவள் பிறந்தாத்துக்குப் போயிருந்தாளேன்னு கேட்டேன்'' என்றார்.

''நீர் வாழ்ந்தாப்பலேயிருக்கு. பிறந்தாத்துக்குப் போனவள் அங்கேயே உட்கார்ந்திருப்பாள் என்று நினைச்சண்டீரோ? அம்மாவும் பொண்ணும் அப்பவே திரும்பி வந்துட்டாளே? நீர் கடுதாசி, கிடுதாசி ஒண்ணும் போடலேன்னு, உம்ம மாமியார் மண்ணை வாரி இறைச்சிருக்காள் பாரும், அக்கிரகாரத்துத் தெருவிலே ஒரு பிடி மண் பாக்கி கிடையாது.''

சம்பு சாஸ்திரி மேலே தீக்ஷிதரிடம் பேச விரும்பவில்லை. உடனே நெடுங்கரைக்குப் புறப்பட்டுப் போக வேணுமென்று சாஸ்திரியின் மனத்தில் தீர்மானமாகி விட்டது. எனவே அவர், ''சரி, நீங்க போய்ட்டுவாங்கோ, தீக்ஷிதர்வாள்! நானும் சீக்கிரத்திலே நெடுங்கரைக்கு வந்து சேர்றேன்'' என்றார்.

''போறேங்காணும், போறேன்! பின்னே, உம்மகிட்ட வந்து நின்னுண்டிருக்கப் போறேனா? ஒரு பத்து ரூபாய் பணம் இருந்தாக் கொடும். அப்புறம் கொடுத்துடறேன்.''

''பணமா, பணம் என்கிறதை நான் தொட்டு ரொம்ப நாளாச்சே!''

''நல்ல ஆஷாடபூதிங்காணும் நீர்! ஒரு சிமிட்டா பொடியாவது கொடுப்பீரோ, அதைக்கூடத் தொட்டு இருபது வருஷம் ஆச்சு என்பீரோ?''

''தயவு செய்து மன்னிக்கணும். நான் என்ன பண்றது? பொடி போடற வழக்கத்தைக்கூட நிறுத்திவிட்டேனே!''

''போங்காணும் போம்! சம்பு சாஸ்திரி, சம்பு சாஸ்திரின்னு ஊரெல்லாம் பிரமாதப் பேரு; ஒரு சிமிட்டா பொடிக்குக்கூட வழியில்லை! எப்படியாவது நாசமாய்ப் போம்!'' என்று சொல்லிவிட்டு, தீக்ஷிதர் மூட்டையைத் தூக்கிக் கொண்டு கிளம்பினார்.

அவர் போனவுடனேயே சாரு வந்து, ''தாத்தா! மாமா யாரு தாத்தா? அவர் மூஞ்சியைப் பார்த்தா எனக்குப் பிடிக்கவே இல்லை'' என்றாள்.

''எனக்குந்தான் அவரைப் பிடிக்கிறதில்லை, சாரு! ஆனால் அவர் ஒரு முக்கியமான சமாசாரம் சொன்னார்; நெடுங்கரையிலே, உனக்கு ஒரு பாட்டி இருக்கான்னு சொல்லியிருக்கேனோல்லியோ? அவளுக்கு ரொம்ப உடம்பு சரியாயில்லையாம். நாம் நெடுங்கரைக்குப் போய் அவளைப் பார்ப்பமா, சாரு?'' என்று சாஸ்திரி கேட்டார்.

சாரு, ''உடனே போகணும், தாத்தா! நான்தான் முன்னேயே பிடிச்சுச் சொல்லிண்டிருக்கேனே? ஊர்கோலம் போய்ப் போய் எனக்கும் அலுத்துப் போச்சு!'' என்றாள்.

மறு நாளே இருவரும் நெடுங்கரைக்குப் பிரயாணமானார்கள்.

## 55. ராஜி யோசனை

சென்னைப்பட்டணம் 'கொல்' லென்றிருந்தது. உமா ராணியின் புருஷன் என்று சொல்லிக் கொண்டு ஒருவன் வந்திருக்கிறானாம் என்றும், அவன் உமாராணியின் பேரில் தாம்பத்திய உரிமைக்கு வழக்குத் தொடுக்கப் போகிறானாம் என்றும் செய்தி பரவிற்று. எங்கே பார்த்தாலும் ஜனங்கள் இதைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள். உமாராணியின் பூர்வ ஜீவியத்தைப் பற்றித் தெரிந்து கொள்வதில் ஏற்கெனவே ரொம்பப் பேருக்கு ஆவல் இருந்தது. அவளுடைய வாழ்க்கையில் ஏதோ மர்மம் இருக்கிறதென்று எல்லாருமே நினைத்தார்கள். அது என்னவாயிருக்கலாமென்று பலர் பலவிதமாய் ஊகம் செய்து கொண்டிருந்தார்கள். இப்போது உண்மை வெளியாவதற்கு ஹேது உண்டாகவே, நகரில் பிரமாதமான பரபரப்பு ஏற்பட்டிருந்தது.

கடைசியில் ஒருநாள், பத்திரிகைகளில், கேஸ் தாக்கலாகிவிட்டது என்ற விவரம் வெளியாயிற்று. அந்தச் செய்தியைப் பெரிய தலைப்புகளுடன் முக்கியமான இடத்தில் பத்திரிகைகள் வெளியிட்டிருந்தன:

**கலியுக அதிசயம்!**
**திடீரென்று வந்தவர் தாம்பத்ய உரிமை கோருகிறார்!**
**உமாராணியின் மேல் வழக்கு!**

என்னும் இது போன்ற தலைப்புகள் பத்திரிகைகளின் இடத்தை அடைத்தன. 'போஸ்டர்' விளம்பரங்களிலும் இந்தக் கேஸ் விவரந்தான் காணப்பட்டது.

மறுநாள் காலையில், ஆபத்சகாய மய்யரின் பாரியை கையில் ஒரு தமிழ்ப் பத்திரிகையுடன் அவருடைய ஆபீஸ் அறைக்கு வந்து சேர்ந்தாள்.

''என்னா? இதென்ன அவமானம்? உங்க உமாராணி மேலே ஏதோ கேஸாமே?'' என்றாள்.

''அதிலே உனக்கு என்ன வந்தது அவமானம்?'' என்று வக்கீல் கேட்டார்.

''நீங்க அங்கே போயிண்டு வந்துண்டு இருக்கேளேன்னுதான்; இல்லாட்டா, ஊரிலே எந்த நாய் எப்படிப் போனா எனக்கென்ன? ஆமாம்; என்னமோ தாம்பத்திய உரிமைக் கேஸுன்னு போட்டிருக்கே, அப்படின்னா என்ன?''

''அப்படினா, 'Suit for Restitution of Conjugal Rights' என்று அர்த்தம்.''

''போருமே பரிகாசம்! இப்படியெல்லாம் நீங்க கிருதக்காப் பேசறதைக் கேட்டாத்தான், எனக்கு எங்கேயாவது ஓடிப் போயிடலாம்னு தோணறது.''

''நீ இப்பச் சொல்றயோல்லியோ? அந்த மாதிரி நிஜமாகவே ஒரு மனுஷனுக்கு அதிர்ஷ்டம் வந்து, அவன் பெண்டாட்டி அவனை விட்டு ஓடிப் போயிடறாள்னு வச்சுக்கோ. அந்த மடையன் அது தனக்கு அதிர்ஷ்டம்னு தெரிஞ்சுக்காமே, அவளைத் தன்னோடு வந்து இருக்கச் செய்யணும்னு கோர்ட்டிலே கேஸ் போட்டான்னா, அதுக்குத்தான் தாம்பத்திய உரிமை வழக்குன்னு சொல்றது.''

''இதென்ன வெட்கக்கேடு? இப்படிக் கூட ஒரு கேஸ் போடறதுண்டா, என்ன?''

''பின்னே சட்டம், கோர்ட்டு எல்லாம் என்னத்துக்காக இருக்குன்னு நினைச்சுண்டிருக்கே? வக்கீல் ஆம்படையாளாயிருந்துண்டு இன்னும் இது தெரிஞ்சுக்காமே இருக்கயே?''

''எனக்குத் தெரிஞ்ச மட்டும் போதும். உலகத்தைப் பத்தித் தெரிஞ்சுக்கத் தெரிஞ்சுக்க ஒண்ணும் தெரியாமலேயிருந்தாத் தேவலைன்னு தோணறது. போனாப் போகட்டும். அந்த உமாராணிக்கு நீங்க பாக்கி எல்லாத்துக்கும் வக்கீலா இருக்கிறது போரும். இந்தக் கேஸுக்கு நீங்க போக வேண்டாம். எனக்கு அவமானமாயிருக்கு.''

''சரியாப் போச்சு! கோர்ட்டிலே எல்லாரும் என்னைப் பார்த்து இந்தக் கேஸ் வந்ததுக்காக அசூயைப் பட்டிண்டிருக்கா. 'உன் பாடு யோகம்' என்று சொல்லிச் சொல்லி வயத்தெரிச்சல் படறா. நீயானா இப்படிச் சொல்றே. இந்தக் கேஸ் மட்டும் நடந்தா, 5000 ரூபாய்க்குக் குறையாமே வரும்படி வரும். கேஸிலே ஜயிச்சுட்டேனா, அப்புறம் அட்வகேட்-ஜெனரலுக்கு அடுத்தபடி நான்தான் பெரிய வக்கீல் இந்த ஊரிலே. கேஸை ஒப்புக் கொள்ளட்டுமா, வேண்டாமா சொல்லு!''

''அதென்னமோ, நீங்களும் உங்க கோர்ட்டும் எப்படியாவது போங்கோ. எனக்கு ஒண்ணும் புடிக்கலை'' என்று சொல்லிவிட்டு வக்கீலின் மனைவி எழுந்து உள்ளே சென்றாள்.

ஆபத்சகாயமய்யர் தம்முடைய முடிவான அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதற்காக அன்று உமாராணியின் பங்களாவுக்குப்

போனார். அவரைக் கண்டதும் உமாராணி, ''என்ன வக்கீல் ஸார்! சட்டம் என்ன சொல்றது? பார்த்தீர்களா?'' என்று கேட்டாள்.

''பார்த்தேன், அம்மா! ஜயிக்கிறதற்குச் சான்ஸ்* இல்லைன்னு சொல்றதற்கில்லை. இந்த விஷயத்திலே சுவர்மேல் பூனை மாதிரி இருக்கு. இந்தப் பக்கம் குதிச்சாலும் குதிக்கும்; அந்தப் பக்கம் குதிச்சாலும் குதிக்கும். கடைசியிலே, ஜட்ஜினுடைய அபிப்பிராயத்தைப் பொறுத்தது.''

''அவ்வளவு இடமிருந்தால் போதும். கேஸை நடத்தறதுக்கு வேண்டிய ஏற்பாடு பண்ணுங்கள். கேஸ் நமக்கு ஜயிக்கவே ஜயிக்காதுன்னாக்கூட, நடத்திப் பார்க்கறதுன்னு நான் தீர்மானிச்சுட்டேன்'' என்று உமாராணி சொன்னாள்.

அப்போது, வக்கீல் சிறிது தயக்கத்துடன், ''ஒரு விஷயம் சொல்லணும்னு நினைக்கிறேன். அது என்னுடைய கடமை. நீங்க சொல்லச் சொன்னா, சொல்றேன்'' என்றார்.

''பேஷாய்ச் சொல்லுங்கள், ஸார்! எப்பேர்ப்பட்ட சமாசாரமாயிருந்தாலும் என்னை ஒண்ணும் செய்யாது. என் நெஞ்சு அப்படிக் கல்லாகிவிட்டது'' என்றாள் உமா.

''ஊரெல்லாம் அதுக்குள்ளே இந்தக் கேஸைப் பத்தியே பேச்சாயிருக்கு. கேஸ் ஆரம்பிச்சாயிடுத்துன்னா, பேச்சு இன்னும் ரொம்ப அதிகமாய்ப் போய்விடும். வெளியிலே நீங்க கிளம்பறதுக்கு முடியாதபடி ஆனாலும் ஆயிடும். நம்ம ஜனங்களின் சுபாவந்தான் உங்களுக்கு தெரியுமே? இதையெல்லாம் யோசித்தால், ஏதாவது ஒருவிதமாய் ராஜியாய்ப் போயிடறதுதான் நல்லதுன்னு எனக்குத் தோணறது...''

அப்போது உமாவின் முகத்தில் உண்டான மாறுதலைப் பார்த்த வக்கீல், உடனே பரபரப்புடன், ''நான் என்னமோ அவரோடு உங்களைப் போயிருக்கச் சொல்றதாக நினைக்கக்கப்படாது. மிஸ்டர் ஸ்ரீதரனுடைய சுபாவம் எனக்கு இப்போ நன்னாத் தெரிஞ்சு போச்சு. ஏதாவது கொஞ்சம் பணங்கொடுத்தா வாங்கிண்டு போயிடுவார். நீங்க உத்தரவு கொடுத்தேள்னா, நான் போய் அவரைப் பார்த்துப் பேசிவிட்டு வர்றேன்'' என்றார்.

உமா இலேசாகச் சிரித்தாள். அந்தச் சிரிப்பில் ஆத்திரமும் அருவருப்பும் கலந்திருந்தன.

''ராஜியாய்ப் போறதா? பணங் கொடுக்கிறதா? என்னத்துக்காகப் பணங் கொடுக்கிறது, வக்கீல் ஸார்! மேலும் மேலும் இவர் பாப கிருத்தியங்களைச் செய்வதற்கா?'' என்று உமா கேட்டுவிட்டு ஒரு நிமிஷம் பேசாமல் இருந்தாள்.

''என்மேல் இவர் கேஸ் போடுகிறதாம்! நான் பணங்கொடுத்து ராஜியாய்ப் போகிறதாம்! பேஷ்... ஒரு காலத்தில் இந்த

மனுஷன் பேரில் வைத்த ஆசையினால் என் இருதயம் என்னமாய்த் துடித்திருக்கிறது. உங்களுக்குத் தெரியுமா? எத்தனை நாள் இவரை நினைத்து நினைத்து ராப்பகல் தூக்கமில்லாமல் கழித்திருக்கிறேன், தெரியுமா? எவ்வளவு நாள் கண்ணீர்விட்டு அழு திருக்கிறேன், தெரியுமா? இப்போது கூட....'' என்று சொல்ல வந்தவள், திடீ ரென்று நிறுத்தி, ''அதையெல்லாம் பற்றி என்னத்திற்கு இப்போது பேச வேண்டும்? போங்கள், கேஸை நடத்தறதற்கு ஏற்பாடு செய்யுங்கள். இனிமே, ராஜிகிஜின்னு எங்கிட்ட ஒண்ணும் பேச வேண்டாம்'' என்றாள்.

இப்படிச் சொல்லிவிட்டு உமா வேறு பக்கம் திரும்பி, கைகளால் கண்களை மூடிக் கொண்டாள். அவளுடைய மனத்தில் பொங்கிய துக்கத்தை ஒருவாறு அறிந்து கொண்ட ஆபத்சகாயமய்யர், எழுந்திருந்து வெளியே போனார். வாசற்படி வரையில் போனவர் மறுபடியும் திரும்பி வந்து, ''இன்னொரு சமாசாரம் சொல்ல மறந்துட் டேன். குழந்தை சாருவைப் பத்தி....'' என்றார்.

உமா, கண்ணைத் துடைத்துக் கொண்டு வக்கீலை நிமிர்ந்து பார்த்து, ''என்ன?'' என்று கேட்டாள்.

''சம்பு சாஸ்திரியும் சாருவும் இப்போது தஞ்சாவூர் ஜில்லாவிலே நெடுங்கரை என்கிற ஊருக்குப் போயிருக்காளாம்.''

''நெடுங்கரைக்கா போயிருக்கா? - நெடுங்கரை - நெடுங்கரை....'' என்று உமா தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள். பிறகு, ''இது உங்களுக்கு எப்படித் தெரிஞ்சது? இன்னும் அவாளைப் போலீஸார் கவனிச்சுண்டு வர்றாளா, என்ன?'' என்று கேட்டாள்.

''அவர்களுடைய பிரசாரத்தினாலே கிராமாந்தரங்களிலெல்லாம் பெரிய குழப்பம் உண்டாகிறதாம். அதற்காக அவர் பின்னோடயே சி.ஐ.டி.காரன் ஒருத்தன் போயிண்டிருக்கானாம். அவனுடைய ரிப்போர்ட்டிலேயிருந்துதான் அவர்கள் நெடுங்கரைக்குப் போயிருக்கிறது தெரிந்தது.''

''சரி; உங்களுக்குக் கோர்ட்டுக்கு நேரமாச்சே. போய்விட்டு வாருங்கள்'' என்றாள் உமா. வக்கீல் போன பிறகு, மேஜையைத் திறந்து, அதில் கிருஷ்ணன் வேஷத்தில் நடனக் கோலத்தில் தோன்றிய சாருவின் புகைப்படத்தை எடுத்தாள். அந்தப் படத்துக்கு முத்தம் கொடுத்துவிட்டு, ''என் கண்ணே! இந்த மாதிரி உன் அப்பா பேரும் அம்மா பேரும் சந்தி சிரிக்கிறதைப் பார்க்க இங்கே இல்லாமற் போனாயே, நீ பாக்கியம் செய்தவள், சாரு!'' என்று சொல்லி, படத்தை மார்பின்மீது வைத்து அணைத்துக் கொண்டு, கண்ணீர் உகுத்தாள்.

(தொடரும்)




● ராஜாராம் நட்கர்னி நிர்வாகப் பயிற்சிக்கு வகுப்புக்கள் எடுக்கிறார். பெரிய பெரிய நிறுவனங்களின் நிர்வாகிகள் பயிற்சி வகுப்புக்கு வருகிறார்கள். இதில் என்ன விசேஷம் என்றால், ராஜாராம் நட்கர்னி, கதாகாலட்சேபம் மூலமாக நிர்வாகப் பயிற்சியைக் கற்றுத் தருவது தான்! நிர்வாகிகள் தரையில் அமர, இவர் மேடை ஏறி, சப்ளா கட்டை தட்டி, பாட்டுப் பாடி, வசனங்கள் பேசி, நடித்து வகுப்பு நடத்துகிறார்!

ஆதாரம் : கரபி

● மிகப் பெரிய நட்சத்திரங்கள் வெடித்துச் சிதறும் போது, மிஞ்சி நிற்கும் அவற்றின் மையப் பகுதி 'பல்சார்' என்று அழைக்கப்படுகிறது. (Pulsar) விண்வெளியில் இத்தகைய பல்சார்கள் இருப்பதை முதன் முதலில் 1968ல் தான் கண்டு பிடித்தார்கள். பல்சார் என்பது நியூட்ரான்களால் உருவானவை. இவற்றை 'நியூட்ரான் கடல்' என்றே கூறலாம். ஒரு நட்சத்திரத்தின் குறுக்களவு பல மில்லியன் கி.மீ. என்றால் பூமிக்கு அருகே உள்ள ஒரு பல்சாரின் குறுக்களவு வெறும் 20 கி.மீ. தான்! ஒரே ஒரு கன செ.மீ. பல்சார் துண்டை, பூமியில் எடை போட்டால் 10 கோடி டன் இருக்குமாம்! நல்ல வேளை! விண்வெளியிலேயே சுழலட்டும்!

- ஆலன்



● க. சேகர், சென்னை - 52.

? ஏப்ரல் 16 வை.கோ. பேரணி...?

! உயர் நீதி மன்றத்தின் தடை உத்தரவைச் சமாளிக்கச் சதுரமான தி.மு.க. கொடியைத் தாங்கிச் சென்றது, நீதிபதிகளையே ஏப்ரல் ஃபூல் செய்ததற்கு ஒப்பாகும். சட்ட மன்றத்தில் விடுதலைப் புலிகளுக்குத் தடை தொடர்பான மசோதா மீது ''வோட்டளிக்காமலிருப்போம்'' என்று கூறியது, உண்மை சொரூபத்தை உணர்த்தியதாகும்.

● எஸ். நாகராஜன், மேலப்பாதி.

? அசாருக்கு அடுத்தபடியாக தலைமை தாங்கத் தகுதி படைத்தவர்?

! 9 டுல்கரின் அண்ணன்!

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

? சென்னை டீ.வி.யில் தமிழ்ப் புத்தாண்டு நிகழ்ச்சிகள் பற்றி...?

! இயல் தமிழா, இசைத் தமிழா, நாடகத் தமிழா என்று பட்டி மன்றத்தில் மோத விட்டார்கள் பாருங்கள், முத்தமிழுக்கு இப்படி ஒரு கஷ்டகாலம் வரும் என்று யாரும் எதிர்பார்த்திருக்க முடியாது! அப்புறம் குன்வக்குடி வேறு! கோயில் மண்டபத்தில் ரெகார்ட் டான்ஸ் பார்த்த அனுபவம்!

● முத்ஸ், நாரேந்தல்.

? இந்தக் கோடைக்கான 'ஜில்' விஷயம் எது?

! இந்த இதழ்.

● இரா. சக்திவேல், பரமத்தி வேலூர்.

? எழுத்தாளர் உமா சந்திரன் மறைவு பற்றி?

! கல்கி வெள்ளி விழா நாவல் போட்டியில் முதல் பரிசு பெற்றது அவரது 'முள்ளும் மலரும்'. நாவலாகப் படிக்காதவர்கள் கூட சினிமா பார்த்திருப்பார்களே. முள்ளையும் மலரச் செய்த அவருக்கு மறைவு ஏது?

● சி. மகேஷ், மதுரை.

? போக்குவரத்துக் கழக ஊழல் பற்றிக் கேள்விப்பட்டீரா?

! கேள்விப்படாத, வெளியே தெரிய வராத ஊழல்கள் இன்னும் அதிகம். இல்லாமலா நஷ்டம் வருகிறது!

● தெ.க. திலீபன், வத்ராயிருப்பு.

? ''தி.மு.க. கொடியேந்தி வருபவர்களுக்குக் கை இருக்காது'' என்று மு.க. ஸ்டாலின் கூறியுள்ளாரே?

! வை.கோ. அணியின் தீவிரத் தொண்டர் ஏழுமலையின் படுகொலைக்கும் இது போன்ற வன்முறையைத் தூண்டும் பேச்சுக்களுக்கும் நேரடித் தொடர்பு உண்டு என்று சத்தியம் பண்ண முடியாது என்றாலும் பொறுப்பற்ற பேச்சு, பின் விளைவுகள் பற்றி எண்ணிப் பார்க்கத் தவறிய சொற்கள் என்பதில் சந்தேகமேயில்லை.

● கே.ஏ. காளிமுத்து, இராணிப்பேட்டை.

? ''பேருந்துப் பயணிகள் கொள்ளையர் தாக்குதலைச் சமாளிக்க உருட்டுக் கட்டைகளை வைத்துக் கொள்ளலாம்'' என்று போலீஸ் ஐ.ஜி. கூறியிருப்பது?

! அப்படி யாரேனும் சென்றால் அந்த உருட்டுக் கட்டைகளைப் பறிமுதல் செய்ய



✱ உண்மை சொரூபம்

# ஏப்ரல் 16, வை. கோ. பேரணி?



* அசாருக்கு அடுத்தபடி....



* மறைவு ஏது?



* பொறுப்பற்ற பேச்சு



* ஆட்சியைப் பிடிப்பாரா?



* ஜும்போ மந்திரிசபை



* பெருந்தன்மை

வேண்டிய நிலையில் உள்ளவர், இப்படிப் பேசுவது நம் துரதிர்ஷ்டம் தான். என்ன செய்ய? ''கத்தி வைத்துக் கொள்ளுங்கள்'' என்று அதி மேதாவித்தனமாகச் சொல்பவரின் வாரிசுகள் ஆளும்போது இப்படிப் பட்ட ஞானோபதேசங்கள்தான் நடக்கும்!

● இரா. அரிராம், மருதவனம்.

*? மறைந்த வ. கம்யூனிஸ்ட் தலைவர் ராஜேஸ்வர் ராவ் பற்றி....?*

! அவரது வாழ்க்கைக் குறிப்பில் ஒரு வரி : ''தமது சொத்துக்கள் முழுவதையும் கட்சிக்கே கொடுத்தவர்''. இப்போது அரசியல் சூழல் தலைகீழாக மாறியிருப்பதைக் காணும் போது ராஜேஸ்வர ராவ் நம் மதிப்பில் எட்டாத உயரத்துக்கே போய் விடுகிறார்!

● ஆர். ராஜதுரை, சீர்காழி.

*? தரிசு நிலங்களை விளை நிலங்களாக்கத் தமிழக அரசு ஐந்து மாவட்டங்களில் ரூ. 150 லட்சம் செலவழிக்கத் திட்டமிட்டுள்ளதே?*

! ஆளும் கட்சிக்காரர்கள் அமோக அறுவடை செய்யலாம்.

● பாலகுமார், திருவில்லிபுத்தூர். ❑

*? என்.டி.ராமராவ் ஆட்சியைக் கைப்பற்ற வாய்ப்புண்டா?*

! ''முன்பு விஜய பாஸ்கர ரெட்டி ஆட்சியை வெள்ளித்தட்டில் வைத்து என்.டி..ஆரிடம் கொடுத்தார்; இப்போது தங்கத்தட்டில் வைத்துக் கொடுக்கப் போகிறார்'' என்று வெங்கல் ராவ் திருவாய் மலர்ந்தருளியது போல் தலைக்குத் தலை வாய்க்கு வந்ததைப் பேசாமல், காங்கிரஸ் ஒற்றுமையாக இருந்து பாடுபட்டால் என்.டி..ஆர். தம்பதிக்கு ஏமாற்றம் ஏற்படக்கூடும்.

● வி.எஸ். ராமு, செம்பட்டி.

*? தமிழ் நாடு சட்டசபை நிகழ்ச்சிகளை எதனுடன் ஒப்பிடலாம்?*

! சென்னை உயர் நீதி மன்றமே தமிழக சட்டசபைக்குத் தான் சளைத்த தல்ல என்று நிரூபிக்க முயன்று வருவதாகத் தோன்றுகிறது. உயர் நீதி மன்ற நீதிபதிகள் மாற்றல் உத்தரவு என்பது கொள்கை அளவில் ஏற்கப் பட்ட பிறகு, அவர்களில் பக்தவத்சலத்தை மட்டும் மாற்றம் செய்யக் கூடாது என்பதற்காக வழக்கறிஞர்கள் வேலை நிறுத்தம் செய்வதும், அதைத் தவறு என்று சுட்டிக்காட்டி நீதிபதிகள் சுற்றறிக்கை அனுப்புவதும், சுற்றறிக்கையை வாபஸ் பெற வேண்டும் என்று கோரி வழக்கறிஞர்கள் மேலும் போராட்டத்தைத் தொடர்வதும்.... 'ஆண்டவனே! நீதி மன்றம் ஒன்றுதான் எங்களுக்கு நம்பிக்கை தரும் அமைப்பாக இருந்து வருகிறது; அந்த நம்பிக்கையும் குலைந்து போக வேண்டாம்; தயவு செய்து நீதி மன்றத்தின் கௌரவத்தையாவது காப்பாற்றிக் கொடு' என்று கண்கலங்க, வேண்டிக் கொள்ளச் செய்யும் நிகழ்ச்சிகள்.

● மா. பழனிசாமி, கே.வி. பாளையம்.

*? கர்நாடக இ. காங்கிரஸுக்கு எதிராகச் செயல்பட்ட ஒன்பது இ. காங்கிரஸ் எம்.எல்.ஏக்கள் கட்சியிலிருந்து நீக்கப்பட்டு விட்டார்களே?*

! அது என்ன பிரமாதமான காரியம், கணிசமான மெஜாரிட்டி இருக்கும் போது! மேலும் விரிசல் விடாமலிருக்க 46 எம்.எல். ஏக்க ளுக்கு மந்திரி பதவி தந்து, ஐந்து எம்.எல்.ஏக்களில் ஒருவர் மந்திரி என்ற கின்னஸ் சாதனையை உருவாக்கியிருக்கிறாரே மொய்லி, அதுவல்லவா சாதனை! அடுத்த கட்டம் ஒவ்வொரு எம்.எல்.ஏக்கும் ஒரு பெரும் பதவி என்பதாகத்தான் இருக்கும்!

● பி.ஆர். மணி, சென்னை.

*? ஏப்ரல் 14 ல் தங்களுக்கு வாழ்த்துக் கூறிய வி.ஐ.பி. யார்?*

! நாலு நாள் தாமதமாக லோபர்ஸ். தமது 36 வருஷ ''365 நாட் அவுட்'' ரிகார்டை முறியடித்தவரை நேரில் வாழ்த்தி மகிழ்ந்த அந்தப் பெருந்தன்மை என்னையே வாழ்த்தியது போல் மெய்சிலிர்க்க வைத்தது. பவ ஆண்டில் இந்தக் கண்ணியம் எல்லோரிடமும் தோன்றட்டும்.

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
மு. பாலகுமார்,
61-A அய்யம்பட்டி,
பிள்ளையார் கோயில்
வடக்குத் தெரு,
திருவில்லிபுத்தூர் - 626 125.

# வடசபரி ஐயப்பன்

அண்மையில், இரண்டாம் முறையாகக் குடமுழுக்காடிய திருத்தலம் சென்னை, ராஜா அண்ணா மலைபுரத்தில் 'வடசபரி'யாக விளங்குகிற சுவாமி ஐயப்பன் திருக்கோவில்!

ஜாதி, மொழி, தேசம் என்கிற பாகுபாடுகளுக்கெல்லாம் அப்பாற்பட்டு, சமயம் சமுதாயப் பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டுள்ள செட்டி நாட்டரசர் குடும்பம் ஆன்மிகப் பணிகளுக்காக அழகுற அமைத்துத் தந்துள்ள ஆலயம் இது.

இக்கோவில் நூற்றுக்கு நூறு சபரிமலை அமைப்பின்படியே உருவாக்கப்பட்டது என்கிறார்கள். இதற்கெனக் கேரள அரசின் அனுமதியோடு சபரிமலை வளாகத்தை அப்படியப்படியே அளவு எடுத்து இங்கே ஆலயம் உருவாக்கினார்கள். 1953 ஆம் ஆண்டில் சபரிமலை ஐயப்பவின் திருமேனியை வடிவமைத்த அதே ஸ்தபதியார் மூலமே, இந்த வடசபரி ஐயப்பனின் ஐம்பொன் திருமேனியையும் உருவாக்கியிருக்கிறார்கள். நாகர்கோவிலில் உள்ள பட்டன் ஆச்சாரி என்னும் அந்தக் கலைஞரின் கைவண்ணத்தில், அற்புதமான ஜோதிப் பிழம்பாய் இங்கே ஐயனின் திருமேனி காட்சி தருகிறது.

நாகர்கோவிலில் உள்ள கிருஷ்ணன் கோவிலிலிருந்து மிகச் சிறப்பான அருள் உலாவாகவே இந்த ஐயப்பன் பயணப்பட்டு கன்னியாகுமரி, திருச்செந்தூர், திருநெல்வேலி, குற்றாலம், திருவில்லிபுத்தூர், மதுரை, இளையாத்தங்குடி, பிள்ளையார்பட்டி, வயிரவன் கோவில், கானாடு காத்தான் என்று பல தலங்களுக்கும் சென்று விட்டுச் சென்னை வந்து சேர்ந்தார். சென்னையில் சிறிய மேடையில் முதலில் ஐயன் திருமேனியை வைத்து வழிபட்ட பிறகே இப்போதைய கருவறைக்குள் கோவிலமர்த்தினார்கள். இன்று, ஐயன் முதலில் இருந்த சிறிய இடத்தைச் சுற்றிலும் தடுப்பு ஏற்படுத்திப் புனிதமான இடமாகப் போற்றுகிறார்கள்.

சுற்றிலும் மிக விசாலமான அரங்கு அமைத்து, பஜனை, சொற்



* கோவில் தோற்றம்...

சிரமம் இன்றிச் சென்று வழிபட உதவு கிறது.

கன்னிமூலை கணபதி என்று வலம்புரி விநாயகர், நாகர், தவிரக் காவல் தெய்வங்களான சின்னக் கடுத்தசாமி, கருப்பசாமி, பெரிய கடுத்தசாமி ஆகியவர்களுக்கும் இந்தக் கோவிலில் வழிபாடுகள் எல்லாம் உண்டு.

அமைதியான முறையில், ஆரவாரங்களின்றி வழிபட ஏற்ற தொரு இனிய சூழலில் இந்த ஆலயம் அமைந்திருப்பதே தனிச் சிறப்புக்குரிய விஷயம்.

அண்மையில் இந்த வடசபரிக்கு



* குடமுழுக்கின்போது...

பொழிவுகள், இசை நிகழ்ச்சிகள் என்று புனிதப்படுத்துகிறார்கள். இருமுடி கட்டிக் கொண்டு வெளியூர்களிலிருந்து வரும் பக்தர்களின் வசதிக்காகத் துப்புர வான ஒரு தங்குமிடமும் அமைத்திருக்கிறார்கள்.

சபரிமலையில் மாளிகைப் புறத்து அம்மன் என்னும் மஞ்ச மாதாவின் ஆலயம், பிரதான ஆலயத்துக்கு அப்பால் உள்ளது. இந்த வட சபரியில் அந்த மாதாவைக் கோவி லுக்கு உட்புறமே கொண்டு வந்து விட்டார்கள். இந்த ஏற்பாடு, வயதில் மூத்த அடியார்கள்

வெள்ளியாலான ரதம் ஒன்றைச் செய்திருக்கிறார்கள். இதற்கு பக்தர்களின் காணிக்கையும் உதவியிருக்கிறது.

முதன் முதலாக எம்.ஏ.எம். ராமசாமி அவர்கள் சபரி மலை சென்றபோது தாய்மார்கள் தரிசிப் பதில் உள்ள சிரமங்களைக் கண்டு, கேட்டு வருந்தினாராம்! இத் தலத்தில் பெண்களும் எளிதில் சென்று ஐயனின் அருள் பெற இயலும். குறிப்பாக ஏழை எளிய மக்கள், பெரும் பொருட்செலவு செய்து சபரிமலை சென்று வரும் பலனை, எளிதாக இங்கே சென்னையிலேயே பெற வேண்டும் என்கிற பரந்த நோக்கில் அமைந்துள்ளது இந்த ஆலயம்!

கமலமணாராஜன்

வட்டமேஜை

# மனத்துக்குள் மத்தளம்!

◆ மாலை முரசின் நியாயமான போராட்டத்தின் வெற்றியைப் பாராட்டியதன் மூலம் கல்கி தன்னுடைய பெருந்தன்மையை நிரூபித்திருக்கிறது.

இராஜாக்கமங்கலம், கே. மணிகண்டன்.

◆ ஆணவம் தலைக்கேற நடந்து கொள்பவராக சேஷனை நீங்கள் சித்திரிப்பது வருந்தத்தக்கது. ஊழல் மிகுந்த நம் அரசியல்வாதிகளை எத்தனை நாள்தான் சகித்துக் கொண்டிருப்பது? பூனைக்கு யாராவது மணி கட்டித்தானாக வேண்டும். நீங்கள் சொல்கிற அன்பு, அரவணைப்பெல்லாம் இவர்களிடம் எடுபடும் என்று தோன்றவில்லை.

மதுரை, சா. பாலசுப்பிரமணியன்.

◆ நடிகை ரேவதியின் கிரீஸ் - இத்தாலியப் பயணம் குறித்த கட்டுரை சுவையாகவும், கலகலப்பாகவும் இருந்தது.

தோட்டக்குறிச்சி, இரா. வளையாபதி.

◆ அந்தக்கால விளையாட்டுக்களான அம்மானை, ஆடு புலி ஆட்டம், பரமபதம், பல்லாங்குழி போன்றவை இப்போதும் கிராமப் புறங்களில் ஆடப்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றன. விளையாட்டுக்கள் பல மறக்கப்படுகின்றன என நீங்கள் கட்டுரையின் முடிவில் வருந்தியிருப்பது தேவையற்றது.

சென்னை - 116, பட்டுக்கோட்டை சிவா.

◆ 'தொண்டர்களை வன்முறைக்கு உசுப்பி விடாதீர்கள்' - 'கல்கி' அடிக்கடி வேண்டுகோள் விடுப்பது எத்தனை நியாயமான, அவசியமான ஒன்று என்பதை கடந்த ஏப்ரல் 8 அன்று உணர்ந்தேன். அன்றைய இரவு, சுமார் $11\frac{1}{2}$ மணி, சேலம் தாண்டி ஒரு சிற்றூரை வகிர்ந்து கொண்டு, பெண்கள், குழந்தைகளைக் கொண்ட பேருந்து செல்ல, நித்திரையில் ஆழ்ந்த பயணிகள்.

திடீரெனப் படீர் படீரெனச் சப்தம், குழந்தைகளின் வீறிடல். இருட்டில் யாரோ, எங்கிருந்தோ வீசிய கற்கள், பஸ் கண்ணாடிகளை நொறுக்கி வீசி, பயணிகள் முகத்தில் பொத்து... பயங்கரமான காட்சி, பச்சிளம் சிசுக்களின் கழுத்திலும், தலையிலும் ரத்தப் பீறிடல்...

'பாட்டாளிகளின் தலைவர்... வாழ்க!' வெளியே குரல்கள், வண்டியினுள்ளே அழுகுரல்களை மீறிக் கேட்கின்றன.

பொறுப்புணர்ந்த டிரைவர், விளக்குகளை அமர்த்திவிட்டு, மெதுவே வண்டியை ஓட்டி, மீட்டு விட்டார். மிஞ்சிய பயணம் முழுதும் தாக்கியவர்களைச் சபித்தபடி வந்தார்கள் பயணிகள். வயிறெரிந்த சாபங்கள், அந்த ஒரு பாவமும் அறியாத ஜனங்களின் வாயிலிருந்து பெருக்க் கொண்டே இருந்தன.

இத்தனையும் போய்ச் சேருவது யாருக்கு?

மக்கள் மனத்தில் இப்படி ஓர் எண்ணம் அழுந்தப் பதிவது, அந்தக் கட்சிக்கோ, அதன் எதிர் காலத்துக்கோ நன்மை பயக்குமா? தீமை பயக்குமா? யோசிக்க வேண்டியவர்கள் யோசிக்கட்டும்.

சென்னை - 24, உஷா தேவி.

◆ அட ஏழுமலையானே! வருஷத்திற்கு நான்கு முறை உன்னைச் சந்திக்க வருகிறேனே... ஒரு முறையாவது, "பக்தா பாலாஜி! உன் கற்பனைகளுக்கு உயிரூட்டும் ஒரு அற்புதமான லொகேஷன் 'தலகோனா அருவி', என் மலைக்குப் பின்புறம்தானுள்ளது... ஒரு நடை போய்விட்டு வாயேன்" எனச் சொன்னதுண்டா? எது எப்படியோ, உன் 'பத்தாவது அவதார' அடையாளத்தின் மூலமாவது அதை அறிய உதவினாயே... அம்மட்டும் மகிழ்ச்சியே!

சென்னை - 1, மண்ணடி. எஸ். பாலாஜி.

◆ காவேரி பிறக்கும் இடத்தைப் பற்றிய தெளிவான கட்டுரையும், அங்கு 'க்ளிக்' செய்யப்பட்ட ரம்மியமான புகைப்படங்களும் எங்கள் மனத்துக்குள் குடியேறி.... மத்தளம் கொட்டத் தொடங்கி விட்டது!

சேலம் - 2, சூரியநிலா.

◆ இரா. முருகனின் 'உலா' இன்னும் என் மனத்தில் உலவிக் கொண்டே இருக்கிறது.

அக்கரைப்பட்டி, கனகராஜ்.

# சக்கரவர்த்தித் திருமகன்

## 77. படை புறப்பட்டது

"யாராலும் செய்ய முடியாத ஒரு காரியத்தை, ஏன், யாராலும் நினைக்கக் கூட முடியாத ஒரு காரியத்தை ஹனுமான் செய்து முடித்தான். இவனுக்கு நான் என்ன பிரதியுபகாரம் செய்து திருப்தியடைய முடியும்?" என்று ராமசந்திரன் ஹனுமானைக் கட்டியணைத்துக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் விட்டான். பிறகு மேல் நடக்க வேண்டிய காரியத்தைப் பற்றி யோசித்தான்.

"சுக்ரீவ! ஹனுமான் அற்புதமான காரியம் செய்தான். ராக்ஷசர்களால் காக்கப்பட்ட லங்கா நகரத்தில் புகுந்து சீதையைக் கண்டு அவளுக்குத் தைரியம் சொல்லி அவளுடைய உயிரைக் காப்பாற்றினான். அவளைப் பற்றி க்ஷேம சமாசாரம் கொண்டு வந்து என்னையும் காப்பாற்றினான். ஆனால் இப்போது சமுத்திரத்தை எப்படித் தாண்டப் போகிறோம்? உன்னுடைய சேனை எவ்வாறு அக்கரை போய்ச் சேருவது? ராவணனுடைய நகரத்தையும் ராக்ஷச சேனையையும் தாக்க வேண்டுமானால் முதலில் நாம் இந்தக் கடலைத் தாண்ட வேண்டுமல்லவா? இதற்கு வழி தோன்றவில்லை. ஹனுமான் செய்த பெருங்காரியமும் அதனால் உண்டான மகிழ்ச்சியும் இந்தக் கவலையில் கரைந்து போவதாக இருக்கிறது" என்று சொல்லி தியானத்தில் மூழ்கினான்.

ராமனுடைய கவலையைக் கண்டு வானர ராஜன், "இதுவென்ன, ராமனே! நீரும் இப்படி மனத்தாழ்ச்சியடையலாமா? உமக்கு என்ன பயம்? இதோ என் வீரர்கள் இருக்கிறார்கள். இவர்கள் உமக்காக உயிரைக் கொடுக்கக் காத்திருக்கிறார்கள். சந்தோஷமாகவே உயிரைக் கொடுப்பார்கள் என்பது எனக்குத் தெரியும். கவலைப்படலாகாது. கவலை அதைரியத்தை உண்டாக்கும். மனத்தைக் கவலையில் செலுத்தாதீர். உம்மையும் தம்பியையும் லங்கைக்குக் கொண்டு போய்ச் சேர்ப்பது எங்கள் காரியம். அதைப் பற்றிச் சந்தேகப்பட வேண்டாம். நீர் பகைவனைக் கொன்று சீதையை மீட்டுக் கொண்டு வராமற் போவதில்லை. இதை உறுதியாக நம்புவீர். லங்கையை எப்போது ஹனுமான் கண்டானோ, அப்போது அந்தக் கோட்டை அழிந்தது என்று வைத்துக் கொள்வீர். சோகத்தில் பயனில்லை. சோகம் சூரனுக்குப் பெரும்பகை. அது





தைரியத்தை அழிக்கும். அதை உடனே விலக்குவீர். எல்லாம் தெரிந்த உமக்கு நான் ஏன் சொல்ல வேண்டும்? உமக்குத் துணை நாம் இருக்க, நீர் ஏன் கவலைப்பட வேண்டும்? நானும் என்னுடைய வானரங் களும் உமக்குத் துணை யாக இருக்க, வில் பிடித்த நீர் நின்றால் உம்மைத் தடுப்பவர் யார்? இனி சோகத்தை நீக்கி க்ஷத்திரியனுக் குரிய ரோஷத்தை மேற்கொள்வீர். கடலை எவ்வாறு தாண்டுவது என்பதை உம்முடைய நுண்ணறி வைப் பயன்படுத்தி ஆராய்வீர். என்னுடைய வானர வீரர்களுடைய சக்தியை அறிந்து கொண்டு அவர்களைப் பயன் படுத்திக் கொள்வீர்! நமக்கு வெற்றி நிச்சயம். என் உள்ளத்தில் எழும் உணர்ச்சியே அதற் குச் சாக்ஷியாகும் ஒரு நிமித்தம்'' என்றான்.

இவ்வாறு தேற்றி வானரராஜன் ராமனை உற்சாகப்படுத்தினான். ராமனும், ஹனுமானும் பிறகு லங்கையைப் பற்றிப் பேசி நகரம், கோட்டை, அரண் முதலியவைகளின் பலத்தை சக்கரவர்த்தித் திருமகன் கேட்டு அறிந்து கொண்டான்.

லங்கையின் ஐசுவரியம், சுபிட்சம், ராக்ஷசர்களின் சந்தோஷம், ராவணனிடம் அவர்கள் வைத்திருக்கும் நம்பிக்கை, அன்பு இவற்றையெல்லாம் ஹனுமான் ஒன்றும் மறைக்காமல் சொன்னான். ராவணனுடைய சேனா பலம், கோட்டையின் பலம், அதன் அரண்களின் அமைப்பு, மிகக் கவனமாகக் காவல் காக்கும் சேனாபலம், கல்லெறி யந்திரங்கள், மதில் சுவர்கள், வாயில்கள், அகழிகள், அகழிகளின் மேல் வேண்டியபோது இறக்குவதும் மேலே தூக்கி விடுவதுமான மரப் பாலங்கள், இவையெல்லாம் எவ்வளவு ஜாக்கிரதையாகவும் பலமாகவும் அமைக்கப்பட்டிருக்கின்றன என்பதை ஹனுமான் ராமனுக்கு எடுத்துச் சொன்னான். கடற்கரையைப் பற்றியும் சொன்னான். கப்பல்கள் அங்கே அண்ட முடியாது. ''திரிகூட மலையும் லங்கா நகரமும் கோட்டையும் எந்த சத்துருவும் பக்கத்தில் நெருங்க முடியாத முறையில் ராவணனால் காக்கப்பட்டு வருகின்றன. ராவணனுடைய பலமும், செல்வமும், சேனா பலமும் சொல்லுக்கு அடங்காதவை. ஆயினும் நம்முடைய வானர சேனைக்கு இதையெல்லாம் அழிக்கும் சக்தி உண்டு என்று உறுதியாக இருப்பீராக. அங்கதன், த்விவிதன், மைந்தன், ஜாம்பவான், பனஸன், நளன், நீலன், இந்த நிகரற்ற வீரர்கள் இருக்கிறார்கள். பெரும் படையும் இருக்கிறது. தரையைத் தீண்டாமல் மேலே கிளம்பிச் சென்று லங்கையை அழிப்போம். அதன் மலையரணையும் காட்டரணையும் நாம் பொருட்படுத்த

ராஜாஜி

## ராமேஸ்வரம் வாசகர்களே...

**அடுத்தது உங்கள் ஊர்ச்சிறப்பிதழ் வரப் போகிறது. ராமேஸ்வரம் பற்றி வித்தியாசமான தகவல்கள் நிறைந்த உங்கள் கடிதங்கள் வந்து சேரக் கடைசி நாள் 15.5.94.**

**- ஆசிரியர்**

வேண்டியதில்லை. உடைத்து நாசம் செய்வோம். நல்ல முகூர்த்தம் பார்த்துப் புறப்பட உத்தரவு கொடுங்கள்'' என்று ஹனுமான் சொன்னான்.

**உ**த்தரப் பங்குனி நட்சத்திரத்தன்று வெற்றி தரும் முகூர்த்தமான மத்தியான காலத்தில் வானரப்படை தெற்குக் கடலை நோக்கிப் புறப்பட்டது. புறப்படும்போது நல்ல சகுனங்கள் கண்டார்கள். ராமனும் சுக்ரீவனும் லக்ஷ்மணனும் பேசிக்கொண்டு சென்றார்கள்.

''நாம் புறப்பட்டோம் என்பதை சீதை அறிந்தால் தைரியமடைந்து உயிரை வைத்துக் கொண்டிருப்பாள்'' என்றான் ராமன்.

மார்க்கமறிந்த படை வீரர்கள் சிலர் முன்னால் சென்று, போகும் வழியில் பகைவர்கள் மறைந்திருக்கிறார்களா என்று பார்த்துக் கொண்டு சென்றார்கள். பெருஞ் சேனைக்கு உணவும் தாகத்துக்குத் தண்ணீரும் கிடைக்கும் பிரதேசமாகப் பார்த்துக் கொண்டு சென்றார்கள். வானரப் படை வெகு வேகமாக மலைகளையும் காடுகளையும் தாண்டிச் சென்றது. ராமனையும் லக்ஷ்மணனையும் வானரர்கள் தூக்கிச் சென்றார்கள்.

சேனையில் உற்சாகம் பெருகி வளர்ந்தது. குதித்துக் கொண்டும், கர்ஜித்துக் கொண்டும் விளையாடிக் கொண்டும் வானரர்கள் சென்றார்கள். ராவணனை 'நான் கொல்வேன்' என்று போட்டி போட்டு பேசிக் கொண்டு சென்றதை ராமன் கேட்டு உற்சாகம் அடைந்தான். நீலனும் குமுதனும் சேனைக்கு முன்புறமாக மார்க்கத்தைச் சோதித்துக் கொண்டு சென்றார்கள். பின்னாலும் சிறந்த வீரர்கள் சேனையைக் காத்து வந்தார்கள். ராஜா சுக்ரீவனும் ராம லக்ஷ்மணர்களும் சேனை மத்திய பாகத்தில் சென்றார்கள்.

வழியில் வந்த நகரங்களுக்காவது கிராமங்களுக்காவது எவ்வித சேதமும் செய்யாமல் செல்ல வேண்டுமென்று ராமனுடைய கண்டிப்பான உத்தரவு.

படையின் கோஷம் சமுத்திரத்தின் சப்தம்போல எட்டுத் திசைகளிலும் நிறைந்தது. தூசி ஆகாயம் அளாவிக் கிளம்பிற்று.

**ம**கேந்திர மலையண்டை வந்ததும் ராமன் மலைமேல் ஏறிக் கடலைப் பார்த்தான்.

''இனி இந்த சமுத்திரத்தை எப்படி நம்முடைய சேனை கடப்பது என்பதைப்பற்றித் தீர்மானிக்க வேண்டும். அதுவரையில் இவ்விடம் வனத்தில் சேனை தங்கலாம்'' என்றான் ராமன். அவ்வாறே சுக்ரீவன் படைவீரர்களுக்கு ஆணையிட்டான்.

சமுத்திரக்கரை வனத்தில் வானர சேனை தங்கிற்று. பகைவர்களுடைய சூழ்ச்சியால் யாதொரு தீங்கும் ஏற்

### அடுத்த இதழில்....

- **இந்தியா விற்பனைக்கா?**

  - புதிய சினிமா பகுதி

- **சர்ச்சைக்குரிய ஒரு கு.க. சாதனம்!**

  - ஓர் அலசல்



படாமல் வீரர்கள் நாலா பக்கமும் ஜாக்கிரதையாகப் பார்த்து வந்தார்கள். எல்லாருக்கும் சௌகரியமாகத் தங்குமிடம் அமைந்ததா என்று சுக்ரீவனும் ராமலக்ஷ்மணர்களும் பார்த்துத் திருப்தியடைந்த பின் ராமன், லக்ஷ்மணனுடன் தனியாக உட்கார்ந்து பேசினான்.

“பிரியமான ஒரு பொருளை இழந்து விட்டால் நாளடைவில் அதன் நினைவும் அதை விட்டுப் பிரிந்து, துயரமும் குறைந்து போகும் என்று சொல்லுகிறார்களே? ஆனால் லக்ஷ்மணா! சீதையின் பிரிவைப் பற்றி நான் இதைக் காணவில்லை'' என்றான்.

''ராவணன் சீதையைப் பிடித்துத் தூக்கிப் போகும்போது, 'ஹா நாதா! ஹா ராமா! ஹா லக்ஷ்மணா' என்று கத்தினாளே! நாம் உதவாமல் போனோமே. அப்போது அவள் பட்ட துயரத்தை எண்ண எண்ண என் துக்கம் கடல்போல் பெருகுகிறதே. நான் என்ன செய்வேன்? விஷத்தைக் குடித்துவிட்டு

**மேல் அட்டையில் : கங்கா**
**வண்ணப்படம் : கோபிநாத்**

ஒவ்வொரு அவயவமும் எரிகிறது போல் என் அவயவங்கள் எரிகின்றன. தேகம் முழுவதும் தீக்கொளுத்தினாற் போல் எரிகிறதே! கொடிய ராக்ஷசிகளிடையில் அகப்பட்டுத் தவித்துக் கொண்டிருக்கிறாளே! ஜனகன் மகள், தசரத சக்கரவர்த்தி வீட்டில் புகுந்த மருமகள், தரையில் அரக்கிகளால் சூழப்பட்டுச் சிறையில் கிடக்கிறாளே!'' என்று ராமன் துக்கப்பட்டுப் பிரலாபித்தான்.

''ராம! துக்கப்படாதே! ராவணனை வதம் செய்து சீதையை வெற்றியுடன் அயோத்திக்கு அழைத்துச் செல்லும் நாள் கிட்டி வந்தது! தேவ கன்னியைப் போல் அயோத்தியில் பிரவேசிப்பாள்! துக்கத்தை ஒழித்துத் தைரியத்தை மேற்கொள்வீர்!'' என்றான் தம்பி.

(தொடரும்)












# சும்மா சுவைத்தும் பாருங்கள்!

இங்கே இரண்டு புதுவித ஐஸ்கிரீம் குறிப்புகள். செலவு குறைவு. செய்வதும் சுலபம் என்பது ஐஸ்கிரீமை விடவும் ஜில்லான விஷயம்.

## பிரெட் ஐஸ்கிரீம்:

காய்ச்சாத பால் ஒரு லிட்டர், சர்க்கரை 200 கிராம், இரண்டு முட்டை, இரண்டு ஸ்பூன் கஸ்டட் பவுடர், 200 கிராம் வெண்ணெய், 6 துண்டுகள் பிரெட் (ஓரப் பகுதி நீக்கியது) பிஸ்தா எஸன்ஸ் மூன்று சொட்டு, பிஸ்தா கலர் 2 சிட்டிகை - தேவையான பொருட்கள் இவ்வளவே. இனி செய்முறை. 1. கஸ்டட் பவுடர், முட்டை இரண்டையும் கலந்து, கட்டியில்லாமல் இருபது நிமிடங்கள் நன்கு அடிக்கவும். 2. காய்ச்சாத பாலுடன் சர்க்கரையைக் கலந்து முட்டைக் கலவையைச் சேர்க்கவும். 3. இந்தப் பாலை அடுப்பில் வைத்து மிதமான தீயில் கிளறிக் கொண்டே காய்ச்சவும். பால் நன்கு காய்ந்து கூழ் போல கெட்டியாகப் பொங்கி வரும் பொழுது எடுத்து விடவும். நன்கு ஆறவைக்கவும். இக்கூழுடன் வெண்ணெய், எசன்ஸ், கலர் பவுடர் மூன்றையும் சேர்த்து மிக்ஸியில் அடித்து, காற்றுப் புகாத, மூடி போட்ட அழுத்தமான டப்பாவில் ஊற்றி ஃப்ரீசரில் வைக்கவும். ஒரு மணிநேரத்திற்குப் பிறகு, வெளியே எடுத்து, பிரட் ஸ்லைஸ்களைச் சேர்த்து கெட்டியான கலவையை மீண்டும் மிக்ஸியில் அடிக்கவும். ஐந்து மணி நேரம் ஃப்ரீசரில் வைத்து எடுத்து செர்ரி, கிஸ்மிஸ் போன்ற பழங்களைத் தூவி சுவைக்கலாம்.

## ஆரஞ்சு ஜூஸ் ஐஸ்க்ரீம்:

கமலாப் பழச் சாறு - 1½ கப்
எலுமிச்சம்பழச் சாறு - ¼ கப்
பால் (தண்ணீர் விடாதது) - ¾ கப்
சர்க்கரை (பொடித்தது) - 1¼ கப்
க்ரீம் - 1½ கப்
உப்புத்தூள் - 1 சிட்டிகை
லெமன் மஞ்சள் பவுடர் - 1 சிட்டிகை - தேவை இவ்வளவே.

முதல் காரியமாக, பால், சர்க்கரைத்தூள் இரண்டையும் கலக்கவும். இக்கலவையை அடுப்பில் ஏற்றி, சிறிய தீயில் வைத்து, ஐந்து நிமிடங்கள் கொதிக்க விடவும். நன்கு ஆறியபிறகு கலர் பவுடர், க்ரீம், உப்புத்தூள், கமலா மற்றும் எலுமிச்சை சாறுகளையும் கலந்து, ஃப்ரீஸரில் வைத்து ஒரு மணி நேரத்திற்குப் பிறகு வெளியே எடுத்து, மிக்ஸியில் போட்டு நன்கு அடிக்கவும். அடித்த கலவையை அழுத்தமான மூடி போட்ட டப்பாவில் ஊற்றி, மீண்டும் ஃப்ரீஸரில் வைத்து, ஐந்து மணி நேரத்திற்குப் பிறகு சாப்பிட்டுப் பாருங்கள்.....ய்ய்ய்...யே!

– எம்.எஸ். அபர்ணா

# ஜில் போட்டி-பரிசு ரூ. 250/-



அருவி படம் பார்த்ததும் 'ஜில்லென்று ஒரு போட்டி வைத்தால் என்ன?' என்று தோன்றியது.

பிரமாதம் ஒன்றுமில்லை. ஒவ்வொரு கட்டத்தையும் ஒவ்வொரு எழுத்தால் பூர்த்தி செய்து அருவி வர்ணனையை அனுப்பி வைக்க வேண்டியதுதான். நாங்கள் வைத்துள்ள வர்ணனை போலவே உங்கள் வர்ணனையும் அமைந்திருந்தால் பரிசு ரூ.250/-. ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசு பகிர்ந்து அளிக்கப்படும். பத்துக்கு மேல் என்றால் குலுக்கல். கூப்பனை நிரப்பி, உறை மீது "ஜில் போட்டி" என்று குறிப் பிடவும். முடிவு தேதி: 4.5.94.

ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

அருகே நடந்தால்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| சா | | | | | | | ம் |

அடியில் நின்றால்

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | யெ | | | தா | | | |

கோடையில் கண்டால்

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | ணீ | | | | | கு | |

மேடையில் பேச

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | மி | | | | | ள் | | |

ஆதவன் விளையாட

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | ல் | | | யு | |

ஆண்டவன் தரிசனம்

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| இ | | | | | | ரி | | |

என் பெயர் : ..............................

விலாசம் : ..............................

..............................

டிசம்பர், ஜனவரியில் சென்னையிலுள்ளவர்கள் 'அப்பப்பா... என்ன குளிர்' என்று வீட்டிற்குள் அடங்கிக் கிடக்கும் போது, மைனஸ் தட்ப நிலையில், பனிமலைகளின் மீது காவல் காத்துக் கொண்டிருக்கும் நமது ஜவான்களின் நிலை? காஷ்மீர், லே, மற்றும் பார்டர் ஏரியாக்களில் பணியாற்றி விட்டு வந்த ராணுவத்தினர் சிலரிடம் பேச்சுக் கொடுத்த போது....

- சியாசென் பகுதியில் மைனஸ் 20, 30 என்று இருக்கும். பங்கர்களுக்குள்ளேயே இருந்து கொண்டு காவல் காக்க வேண்டும். சமயத்தில் பனிப்புயலே அடிக்கும். பங்கர்கள் மூடிக் கொண்டு விடும்.
- பனிமழையைத் தாங்கும் அளவுக்கு டெண்ட் போடப்பட்டிருக்கும். நடுவில் 'புகாரி' என்ற மண்ணெண்ணெய் விளக்கு வைக்கப்பட்டிருக்கும். அவ்வப்போது கைகளைச் சூடேற்றிக் கொள்ளுவோம்.
- இயற்கை அழைப்புக்காகக் கூட பாண்ட் பாக்கெட்டில் வைத்திருக்கும் கைகளை எடுக்கத் தயக்கமாக இருக்கும். ஏனென்றால், சில வினாடிகளில் விரல்கள் மரத்துப் போய்ச் செயலிழந்து விடும்.
- அடிக்கொரு முறை தேனீர் சாப்பிட்டால் உடம்பில் ஓரளவு கதகதப்பிருக்கும்.
- ஆபீஸரானாலும், ஜவானானாலும், குளிரைத் தாங்க ஒரே விதமான உடை தான் சப்ளை செய்வார்கள். அந்தப் பகுதிகளில் எதிரிகளின் குண்டுகளுக்குப் பலியானவர்களை விட, பனி ஜுரத்தினாலும், பனிப்பாறைகளில் சிக்கியும் இறப்பவர்கள் தான் அதிகம்.

- தில்லப்பா



# 'ஜில்' ஜவான்கள் சொல்கிறார்கள்...







ஒருவர். 'இந்தி(ய) ஆதிக்கத்தை எதிர்ப்போம்' என்று ஒருவர் அட்டை பிடித்து வர, அங்கங்கே அவ்வப்போது புலிகள் ஆதரவு சாயல் தென்பட்டது.

வை.கோ. பார்வையிட்டுக் கொண்டு இருந்த மேடைக்கு கொஞ்சம் தள்ளி ஒரு வீட்டின் மாடியில் இருந்து அவர் மனைவி, மகன், மகள்கள், ஊர்வலத்தை பார்வையிட்டுக் கொண்டிருந்தனர். 'தண்ணீர்ப் பந்தல்கள்' வையுங்கள் என்று ஜெ., அ.தி.மு.க.காரர்களுக்கு இட்ட கட்டளையின் பலனாய் வை.கோ. பேரணி ஆட்களுக்கு வழியெங்கும் தாக சாந்தி!

பொதுக் கூட்டம் துவங்கும் முன் தோழர்கள் பாதி தூக்கத்தில் இருந்தாலும், காலை ஐந்து மணிக்கு வை.கோ. பேசத் துவங்குமுன் கடல் தண்ணீரில் கால், கை அலம்பிக் கொண்டு, வாயைக் கொப்பளித்து வந்து விட்டது கூட்டம்! எதிரியாக இருக்கும் தகுதியைக் கூட கருணாநிதி இழந்து விட்டார்; இனி எங்கள் முதல் எதிரி அ.தி.மு.க.தான்' என்று முதன் முறையாக வெளிப்படையாகக் குரல் கொடுத்தார் வை.கோ. பேரணிக்குத் தனியார் பஸ்களைத் தர விடாமல் கெடுபிடி பண்ணி விட்டாராம் செங்கோட்டையன்.

என்ன தான் ஆரம்ப ஆர்வம் என்றாலும் வண்ண விளக்குகள், கட் அவுட்கள், அலங்கார வளைவுகள்... இதற்கெல்லாம் செலவாகும் பணம்? யோசித்தவாறே, பத்திரிகையாளர்களுக்குக் கொடுத்த பேட்ஜை இயல்பாகத் திருப்பிப் பார்த்தபோது, ஓரத்தில் 'ஸ்வஸ்திக்' சின்னத்துடன் கூடிய சேவல் அங்கு சிரித்துக் கொண்டிருந்தது. 1989ல் ஜெ.அணியின் தேர்தல் சின்னம் சேவல் தான். எங்கோ உதைக்கிறதே!

# 'கை இங்கே; ஸ்டாலின் எங்கே?'

சென்னையிலிருந்து குமரி வரை 'வை.கோ. அழைக்கிறார்' என்று சுவரில் எழுதியதற்கும் பத்துவித போஸ்டர் அடித்ததற்கும் நல்ல பலன்தான். ''கறுப்பு சிவப்பு கொடியோடு துரோகக் கூட்டம் வந்தால் அவர்களை மடக்குங்கள்; கையை வெட்டுங்கள் என்றெல்லாம் கலைஞர் தரப்பிலிருந்து விடப்பட்ட மிரட்டல்கள் பயனற்றுப் போய்விட்டன. முதல் நாள் மாலை ஐந்தரை மணிக்குத் துவங்கிய ஊர்வலம் அடுத்த நாளின் துவக்கத்தில்தான் முடிந்தது. அதுவரை மேடையில் நின்று கை யை ஆட்டிய தலைவர்களுக்கு ஐண்டு பாம் கண்டிப்பாகத் தேவைப்பட்டிருக்கும். ஊர்வலத்தின் தொடக்கத்தில் வை.கோ முகத்தில் தோன்றிய சிரிப்பு, இறுதிவரை மாறவேயில்லை.

'கை இங்கே, ஸ்டாலின் எங்கே?' என்று குரல் கொடுத்து வந்தவர், வை.கோ. அணியினர்.

பத்து நாட்களாகப் பயிற்சி கொடுக்கப்பட்டு, 'தமிழ்க் கட்டளைகள்'படி நடை போட்டு வந்த தொண்டர் அணியினர் பிரமிப்பை உண்டாக்கினர். ஆனால் அந்த தமிழ்க் கட்டளைகள் ஒன்றும் சரியாகப் புரியவில்லை! 'யாழ்ப்பாணத் தமிழா?' என்று கிண்டலடித்தார் பத்திரிகைத் தோழர் ஒருவர்.

– ஸ்ரீநிவாசன்
படம்: ராமமூர்த்தி

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர்: வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ்பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

பதிவு எண்: 26383 போன்: 583241




# கல்பதரு பெனிபிட் பண்டு லிமிடெட்

(கம்பெனிகள் சட்டப்படி பதிவு செய்து நிறுவப்பட்டது)
பதிவு அலுவலகம்: 134, ராசப்ப செட்டி தெரு,
(ஸ்ரீ கந்தகோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-600 003.

**பிக்சட் டிபாசிட் திட்டம் மாத வட்டிக்கான காசோலைகள் முன் கூட்டியே வழங்கப்படும்**

| காலம் | 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|
| வருட வட்டி வீதம் | 14% | 15% | 16% | 17.5% | 18.5% | 19% | 19.5% | 20% * |



**மகளிர் ஆண்டு திட்டம்**

**1994** சர்வதேச மகளிர் ஆண்டை முன்னிட்டு பெண்கள் பெயரில் செலுத்தப்படும் பிக்சட் டிபாசிட்டுகளுக்கு 1% அதிக வட்டி வழங்கப்படும்.
குறைந்த அளவு டிபாசிட் ரூ. 5000/- காலம்: 1 ஆண்டு



**அக்ஷயா டிபாசிட் திட்டம் 20%** *

குறைந்த அளவு ரூ. 10,000/- டிபாசிட் காலம் : 5 ஆண்டுகள் மாதவட்டிக்கான செக்குகள் முன் கூட்டியே கொடுக்கப்படும்.



**கல்பதரு மணிபேக் திட்டம்**

அ) பிரதி மாதம் ரூ.100/- வீதம் தொடர்ந்து 15 வருடம் செலுத்த வேண்டும்
முதல் 5ம் ஆண்டு முடிவில் நீங்கள் செலுத்திய ரூ. 6000/-ஐ பெறுவீர் !
2வது 5ம் ஆண்டு முடிவில் மீண்டும் ரூ.6000/-ஐ பெறுவீர் !
3வது 5ம் ஆண்டு முடிவில் ரூ.51,000/-ஐ பெறுவீர் !



**முதியவர் நலத்திட்டம்: வயோதிகர் விதவைகள் கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.**

| தொகை | காலம் | வட்டிவீதம் |
|---|---|---|
| ரூ. 10,000 | 12 மாதங்கள் | 20% |
| ரூ. 10,000 கீழ் | | 19% |

**சேமிப்பு டிபாசிட் திட்டம் - 10% வரை வட்டி வழங்கப்படும்**



**கடன்**

நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்
சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும்

வட்டி விகிதம் ரூ.1.95

அலுவலக நேரம் : காலை 8.30 முதல் 12.30 வரை மாலை 2.00 முதல் 6.00 வரை ஞாயிறு காலை 8.30 முதல் 12.30 வரை

பயன் பெற ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். (செவ்வாய் விடுமுறை) பாதுகாப்பு • சேவை • சுபிட்சம்

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka